# திருக்கோயில்

"என்கடன் பணி செய்து கிடப்பதே"



ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி,
திருப்பாம்புரம்

மாலை 7] குரோதி ஐப்பசி—நவம்பர் 1964 [மணி 2

சென்னை அரசாங்க அறநிலையப்





காஞ்சி காமகோடிபீடம் ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் கூட்டுவித்தருளிய காஞ்சிபுரம் வித்வத் ஸதஸ்ஸில், சென்னை மாநில கவர்னர் திருமிகு, ஜெய சாமராஜ உடையார் பகதூர் அவர்களும், சென்னை மாநில முதலமைச்சர் திருமிகு, எம். பக்தவத்சலம் அவர்களும் உரை நிகழ்த்துதல்.

## பொருள் அடக்கம்



**ஆண்டுச் சந்தா ரூ. 10/-** **தனி இதழ் விலை ரூ. ஒன்று**

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

'திருக்கோயில்' இதழின் சந்தாதாரர்கள் ஆகச் சேர விரும்புபவர்கள் **"திரு. ஆணையர் அவர்கள், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34"** என்னும் முகவரிக்கு ரூபா **பத்து** அனுப்பி, எப்போது வேண்டுமாயினும் சந்தாதாரர்கள் ஆகச் சேர்ந்து கொள்ளலாம்.

அல்லது, அவ்வவ் வட்டார **அறநிலைய உதவி ஆணையாளர்களின்** அலுவலகங்களிலும், மேற்படி சந்தாத் தொகையைச் செலுத்திச் சேரலாம்.

ஓர் ஆண்டின் நடுவில் எந்தமாதத்திற் சேர்ந்தாலும், அடுத்த ஆண்டில் அந்த மாதம் வரையில், 12 இதழ்கள் அனுப்பப்பெறும்.

ஓர் ஆண்டிற்குக் குறைந்த சந்தாத் தொகை ஏற்கப் பெறுவதில்லை.

சந்தாதாரர்கள் தங்களுடைய சரியான முழு முகவரியைத் தெரிவித்துதவுதல், இதழ்கள் தவறுமற் சேர்தற்கு மிகவும் இன்றியமையாதது.

—ஆசிரியர்.



திருக்கோயில்
திங்கள் வெளியீடு

மாலை 7] குரோதி ஐப்பசி—நவம். 1964 [மணி 2

# தொடக்க விழாச் சிறப்புரை

[பூம்புகார்க் கீழ்த்திசைப் பண்பாட்டுக் கல்லூரித் தொடக்க விழாவில் (21-9-64), சென்னை மாநில கவர்னர் திருமிகு. ஜெயசாமராஜ உடையார் பகதூர் அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவின் மொழி பெயர்ப்பு. —ஆசிரியர்]

"திரு. **பக்தவத்சலம்** அவர்களே !
பெருமாட்டிகளே, பெருமக்களே !

இன்று இங்கு நிகழும் **பூம்புகார்க் கல்லூரி**யின் தொடக்க விழாவிற்கு என்னை அழைத்தமைக்காக, **முதல் அமைச்சர்** அவர்களுக்கும், கல்லூரியின் ஆட்சிக் குழுவினர்க்கும், யான் நன்றியுடையேன் !

**சீர்காழிப்** பஞ்சாயத்து ஒன்றிப்புச் சபையின் தலைவர்க்கும், உறுப்பினர்களுக்கும் கூட, அவர்கள் எனக்கு அளித்த **வரவேற்புரைக்காக**, யான் நன்றி செலுத்துகின்றேன் !

நாம் நம்முடைய பழமையின் பெருமையைப் பலவழிகளிலும் நினைவு கூர்தற்குரிய, ஒரு நல்ல செவ்வி இது !

காலத்தின் இயல்பை ஒட்டி மலர்ந்து விரிவடைந்து செல்லும் மனிதகுல சிந்தனையும், நாகரிகமும் ஆகியவற்றின் முன்னேற்றமே **வரலாறு** என்பதாகும். இவற்றின் வேருக வரலாறு என்ப தொன்று தனியே இல்லை.

நாம் தக்கபடி பெருமிதப் பட்டு மகிழ்ந்து கொள்ளும் நம்முடைய பண்டைய பண்பாட்டுக் கலைச் செல்வங்கள், வழிவழியாகத் தொடர்ந்து வந்து, நம் முன்னோர்களிட மிருந்து நமக்குக் கிடைத்துள்ளன.

சென்ற காலத்தின் சிறநத உறுதியான அடிப் படையின் மீது தான், நம்முடைய எதிர் கால வாழ்வை நாம் அமைத்துக் கொள்ள முடியும்.

இக் கல்லூரி அமைந்துள்ள இடமானது, செழிப்பு மிக்க சோழப் பேரரசின் பொற்காலத்தையும், **சிலப்பதிகாரம்**

என்னும் நாடகக் காப்பியத்தின் மெய் சிலிர்க்கும் காட்சிகளையும், நம் எல்லோர்க்கும் நினைவு படுத்தி இன்பம் விளைவிக்கின்றது!

**காவிரிப்பூம்பட்டினம்**, அல்லது முற்காலத்தில் வழங்கியவாறு **பூம்புகார்** என்பது, தமிழ்ப் பண்பாட்டின் நிலைக்களமாகவும், பண்டைச் சோழ வேந்தர்களின் தலைநகரமாகவும் விளங்கியிருந்தது! ஒரு பெருந் துறைமுகமாகவும், அயல் நாட்டு வாணிகம் நிகழ்தற்குரிய நடுவிடமாகவும், பூம்புகார் நகரம் பொலிவுற்றது! சோழப் பேரரசர்கள் இங்கிருந்தே சோழ மண்டலக் கரையின் மிகப் பெரிய - பரந்து விரிந்த - இந்தியக் கப்பல் வாணிகத்தினைத் திறம்பட நடாத்தி வந்தனர்!

தமிழ்ப் பெருங் காப்பியங்களிலும், சான்றோர்களின் பாடல்களிலும், **புகார்** நகரின் பெருமையும் முதன்மையும் குறிப்பிடப் பெற்றுள்ளன.

இத்தகைய வரலாற்றுச் சிறப்புடைய நல்ல இடத்தை, இந்தப் பண்பாட்டுக் கல்லூரியை அமைப்பதற்காக ஆராய்ந்து தேர்ந்தெடுத்தமை, உண்மையிலேயே தெளிந்த மதிநலத்தின் பயனேயாகும். இதற்குக் காரணர்களாக விளங்கியவர்களை, அவர்களின் செயற்றலைப் பாட்டுத் திறனும், செயற்றிட்டச் சிறப்பும் குறித்துப் பாராட்ட விரும்புகின்றேன்.

தற்கால **இந்தியா**வானது, எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் அடைய மிகவும் முயன்று உழைத்து வருகின்றது. குறிப்பாக, கல்வித் துறையில் ஆர்வம் மிகவும் பெருகி வருவதனை நாம் காண்கின்றோம். தொழில் துறை அல்லது பண்டைக் கலைத் துறைகளில், உலகளாவிய கல்வி குறித்து ஏற்பட்டுள்ள இத்தகைய பெருக்கமானது, முற்போக்குள்ள ஒரு நாட்டிற்கும், அந் நாட்டின் மக்களுக்கும் நலம் விளைக்கத் தகுந்த சிறந்ததோர் அறிகுறியே யாகும் என்பதில் ஐயமில்லை.

ஆனால், கல்வியானது எக் காரணத்தைக் கொண்டும், நம்முடைய மாண்பு மிக்க பண்டைக் கலைத் துறை - ஆன்மீகத் துறைகளின் சிறப்புக்களினின்று தனியே பிரிந்து நிற்றல் கூடாது! ஒரு சிறிது சிந்தித்தாலும், இவ்வுண்மை நன்கினிது உணர்ந்து தெளியப்படும்.

காலப் போக்கில், வரலாற்று நெறியில், எத்துணையோ பல வளர்ச்சி - தளர்ச்சிகளை நாம் அடைந்திருக்கின்றோமாயினும், நம் **இந்திய தேசம்** சிந்தனையுலகுக்குத் தந்துள்ள சிறந்த நன்கொடைப் பங்கு, எப்போதுமே உலகளாவிய தொன்றாக இருந்து வந்திருக்கின்றது.

நம்முடைய முன்னோர்களின் வழியாகத் தொன்றுதொட்டு வந்து நமக்குக் கிடைத்திருக்கின்ற **ஞானப் பேரொளியை**, நமக்காகவும் நம்முடைய பிற்கால சந்ததியினர்க்காகவும் போற்றிப் பாதுகாத்தற் பொருட்டு, நம்முடைய அடிப்படை வரையறையமைப்பிற்கு உட்பட்டு, எல்லா வகையான முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டுவது, நமக்கு மிகவும் இன்றியமையாத கடமையாகும்!

கீழ்த் திசைப் பண்பாட்டினைக் கற்பிப்பதற் கென்று நிறுவப் பெற்றுள்ள இந்தக் கல்லூரியானது, இந்தியத் தத்துவத்தின் அறுவகைத் தரிசனங்களையும் (systems), **சைவம் வைஷ்ணவம் கட்டிடக்கலை, சிற்பக்கலை, இசைக்கலை, படிமக்கலை** (Iconography) பற்றிய கொள்கைகளையும் பாடத்திட்டமாகக் கொண்டிருத்தல் குறித்து நான் மிகவும் மகிழ்ச்சி எய்துகின்றேன்!

சமயங்களை யெல்லாம் தோற்றுவித்த ஞானச் சான்றோர்களின் சிந்தனைச் செந் நெறி, எங்ஙனம் உலகளாவியதாகப் பரந்து திகழ்ந்தது என்பதனையும், எல்லாச் சமயங்களின் அடிப்படையும் எவ்வகையில் ஒன்றுகவே இயைந்து விளங்குகின்றன என்பதனையும், தெளிவுற உணர்ந்து கொள்ளுவதற்குப் பல சமயங்களையும் பற்றி ஒப்பிட்டு ஆராய்ந்து அறிந்து கொள்ளும் பயிற்சி, மிகவும் இன்றியமையாதது.

ஆதலால், எல்லாச் சமயங்களையும் ஒப்பிட்டு ஆராய்ந்து உணர்தற்கும், பாடத்திட்டத்தில் இங்கு இடம் அளிக்கப் பெற்றிருத்தலை அறிய, நான் மேலும் மிக உவகை யுறுகின்றேன்.

மக்களின் பண்பாடு - கலை - நாகரிகம் பற்றிய ஆராய்ச்சியில், இந்தியக்கலை ஆராய்ச்சி (Indology) மிகச் சிறந்த ஒரு முதன்மையான இடத்தைப் பெற்று விளங்குகின்றது. இத்துறையில் **ஐரோப்பியப் பேரறிஞர்கள்** நிகழ்த்தியுள்ள தொண்டின் திறம், நாம் வியந்து பாராட்டி மகிழ்தற்குரியது. எனினும், இத்துறை இன்னமும் விரிவுற்றே இருக்கின்றது. நம்முடைய இந்திய மொழிகளின் வாயிலாக, மேலும் அஃது ஆராயப்பட வேண்டி யிருக்கின்றது!

இந்தியக்கலை ஆராய்ச்சியில் வல்ல **பிரெஞ்சுப்** பேரறிஞர் ஒருவர் நன்கு குறிப்பிட்டவாறு, "தற்கால இந்தியக் கலை ஆராய்ச்சியானது, தொன்மைக்கும் அண்மைக்கும் நடுவேயுள்ள இடையீட்டை நிறைவு செய்ய வேண்டியுள்ளது; இந்தியாவின் பண்பாட்டுக் கலைத் தொடர்ச்சியை மட்டுமே யன்றி, அதனுடைய மற்றும் பலவகையான பெருங் கூறுகளைப் பற்றியும் கூட, நாம் ஆராய்ந்து உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்."

தமிழ் பேசுகின்ற மக்கள் பெற்றுள்ள சிறந்த வழிவழிச் செல்வங்கள் எல்லாவற்றிலும், இங்கு அமைக்கப்பட்டுள்ள இக் **கல்லூரி**யானது வளர்ச்சியடையவும், இந்தியக்கலை ஆராய்ச்சிகளுக்கு மதிக்கத் தகுந்த அளவில் சிறந்த பணிகளைச் செய்யவும், பெரிய அளவில் வாய்ப்புக்கள் உள்ளன என்று, யான் திண்ணமாக எண்ணுகின்றேன்.

இக் கல்லூரியைத் தொடக்கி வைத்தலில், யான் பேருவகை பூக்கின்றேன். இதனைத் தொடங்க முயன்றவர்களுக்கும், இதன் ஆட்சிக் குழுவினர்க்கும், ஆசிரியப் பெருமக்கள்-மாணவர்கள் ஆகியோர்க்கும், பாராட்டுதற்குரிய தம்முடைய முயற்சிகளில் **வெற்றியுண்டாகுக!** என்று, என்னுடைய **நல்வாழ்த்துக்களைத்** தெரிவித்துக் கொள்ளுகின்றேன். **ஜெய் ஹிந்த்!"**

# திருவானைக்கா

# அகிலாண்ட நாயகி மாலை

## முன்னுரை

**திருவானைக்கா** என்பது தேவாரப் பாடல் பெற்ற சோழநாட்டுச் சிவதலங்களுள் ஒன்று. இதனைப் பஞ்சபூத தலங்களுள் ஒன்று எனவும் கூறுவர். காஞ்சிபுரம் (பிருதிவி), திருவானைக்கா (அப்பு), திருவண்ணுமலை (தேயு), திருக்காளத்தி (வாயு), சிதம்பரம் (ஆகாசம்) ஆகிய ஐந்தும் **பஞ்சபூத தலங்கள்** எனப்படும்.

திருவானைக்கா **அப்புத்தலம்** எனப்படுதற்கு ஏற்ப, இக்கோயிலின் கருவறையில் சிவலிங்கத் திருவுருவம் எழுந்தருளியுள்ள இடத்தைச் சுற்றிலும், இடையறாது எப்பொழுதும் நீர் ஊறிக்கொண்டிருத்தல் காணலாம். அதனுல் இங்குள்ள பெருமானுக்கு **"நீர்த்திரள் நாதர்"** என்பது பெயர். "திருவானைக்கா வுளானைச் செழுநீர்த்திரளைச் சென்று ஆடினேனே" என்பது **திருநாவுக்கரசர்** திருத்தாண்டகம்.

திருவானைக்கா என்னும் இத்தலத்திலுள்ள அம்பிகைக்கு 'அகிலாண்ட நாயகி' என்பது பெயர். இவ்வம்பிகையின்மீது திரிசிரபுரம் மகாவித்துவான் **மீனுட்சிசுந்தரம் பிள்ளை** அவர்கள் பாடிய சிறந்த கவிதை நூலே, **"திருவானைக்கா அகிலாண்ட நாயகி மாலை"** என்பது. அம்பிகையின் சிறந்த துதிப்பாடல் இலக்கியங்களுள் ஒன்ருக மதித்துப் போற்றத் தகுந்த இவ்வரிய இனிய நூலின் கவிதைகளுள், ஒருசிலவற்றின் பொருள்களை மட்டும், ஈண்டுச் **சுருக்கமாகக் கண்டு** சுவைத்து மகிழ்வோம் :—

## நிலவும் வெயிலும் :

அகிலாண்ட நாயகி **அணிந்துள்ள** மாணிக்கத் தோடுகள், சிறந்த ஒளி வீசித் திகழ்ந்து, புது **வெயில்** எறிக்கின்றன ; அப் பெருமாட்டியின் சிவந்த திருவாயினின்று அரும்பும் புன்முறுவல், அழகிய இனிய ஒளியைத் தோற்றி, இள **நிலா** எறிக்கின்றது ; இங்ஙனம் **வெயிலும்** நிலவும் ஒருங்கே பரப்பும் அம்பிகையின் சிறந்த தோற்றம், காண்பார் கண்களுக்கு அரிய விருந்தாக **அமைந்து** திகழ்கின்றது. (1)

## கடைக்கண் பார்வை :

அகிலாண்ட நாயகியே ! வட திசையில் உள்ள **குபேரனும்** நாணும்படி அளவிறந்த செல்வம் பெற்றும், தென்றிசையில் உள்ள பொதிய மலையில் விளங்கும் **அகத்தியரும்** நாணும்படி சிறந்த கல்வியில் தேர்ந்தும், மிகவும் உயர்ந்து பெருமையுற்றுத் திகழ்பவர்கள் எல்லோரும், நின்னுடைய தாமரை மலர் போன்ற திரு முகத்தின் கடைக்கண் பார்வையருள் முழுவதும் பெற்றவர்களே யன்ருே ! (2)



திருவானைக்கா தலவரலாற்றுச் சிற்பம்.

**அம்மி மிதித்தல் :**

அகிலாண்ட நாயகியே! திருமண காலத்தில் சிவபெருமான் தம் திருக் கையால் எடுத்து **அம்மி**யாகிய கல்லின்மீது வைத்த நின் திருவடிகள், என்னுடைய கைகளுக்கும் எளிவந்து, என்னுடைய மனம் ஆகிய கல்லின் மீதும் எழுந்தருளித் தங்கும் என நினைந்து, உன்னை யான் பல காலும் துதிக்கின்றேன். (3)

**துணை அழைத்துவா :**

அடியவன் ஆகிய என்னை, மிகவும் **கொடியவன்** என்று நினைத்துக் கொண்டு, என் முன் வந்து அருள் புரிவதற்கு நீ அஞ்சுகின்றாய் எனில், முன்னொரு காலத்தில் கொடிய கூற்றுவனை யுதைத்த நின் கணவரைத் **துணையாக** அழைத்துக் கொண்டேனும் வந்து, எனக்கு அருள்புரிவாயாக! (4)

**மாபாதகனுக்கு அருளிய மாட்சி :**

'நீ மிகவும் பாவி! உன் முன்னே வருவதும், வந்து அருள் புரிவதும், என்னுடைய இயல்புக்குச் சிறிதும் தகாது' என்று நீ கூறுவையேயானால், **மதுரையில்** முன்னே ஒரு காலத்தில் **மாபாதகம்** செய்த ஒருவனுக்கு அருள் புரியும் பொருட்டுச் சிவ பிரானோடு எழுந்தருளிப் போந்த அருட்குணம் உடையவள் அல்லவோ நீ! அதனை நீ மறந்து விட்டாயோ? (5)

**ஞானப்பால் ஈந்த புகழ் :**

முன்பு ஒரு காலத்தில் சிவபெருமான் பணித்தருளியவாறு **புகலி** (சீர்காழி)யில் தோன்றிய குழந்தையாகிய **திருஞான சம்பந்தர்க்கு** ஞானப்பால் அளித்தாய்! அதனால் ஏற்பட்ட புகழ் நினக்கே முழுவதும் உரியதாகாமல், சிவ்பிரானுக்கும் உரியதாயிற்று. என்னைத் தொண்டு கொண்டு, எனக்கு நீ அங்ஙனம் அளிப்பாயானால், நினக்கே முழுப் புகழும் உண்டாகும். (6)

**பித்தன் எனும் பெயர் :**

திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! ஆன்மாக்கள் செய்யும் அளவற்ற பிழைகளையும் பொறுத்தருள்பவள் நீ! அத்தகைய நின்னைச் சிவபிரான் தன் அழகிய திருமேனியில் பாதியளவில் மட்டுமே வைத்தான். ஆனால் மூன்று பிழைகள் மட்டுமே பொறுக்கும் இயல்புடைய தண்ணீர் ஆகிய **கங்காதேவியைத்** தன் தலையிலுள்ள சடை முடிமேல் தூக்கி வைத்துக் கொண்டான். இதனால் தான் சிவபிரான் "**பித்தன்**" என்று ஒரு பெயரைப் பெற்றான் போலும்! (7)

**அங்குசமும் பாசமும் :**

அகிலாண்ட நாயகியே! நின்னுடைய திருக் கைகளில் **அங்குசம் - பாசம்** என்னும் இரு கருவிகளையும் நீ வைத்துக் கொண்டிருக்கின்றாய். அதற்குக் காரணம் யாதோ? நின்னுடைய கணவர் ஆகிய **பிரணவகுஞ்சரம்** (சிவபெருமான் ஆகிய யானை), நின் கையிலுள்ள வில்லாகிய **கரும்பை** விரும்பி, வலிமையினால் கவர்ந்து கொள்ளுதல் கூடும் என்று கருதியே, நீ அவற்றை நின் திருக்கைகளில் ஏந்தியிருக்கின்றனை போலும்! (8)

**இழப்பு :**

யான் எனது என்னும் செருக்கினை **இழந்தவர்கள்,** நின்னை ஒரு போதும் **இழக்கமாட்டார்கள்.** இஃது உண்மைதான் என்று மறைகள் முழங்குகின்றன. முழங்கினும், அதனை யுணர்ந்து கொள்

ளாத சழக்கன் ஆகிய யான், நின்னை இழந்து, (யான் எனது என்னும் செருக்கினை இழக்க விரும்பாமல்), உழன்று கொண்டிருக்கின்றேன். என்னுடைய தீவினைக்கும் ஓர் இறுதி யுண்டோ? (9)

**நினக்கே அடைக்கலம்:**

**கண்ணப்பர்** கண்ணைப் பெயர்த்து அப்பியும், **சிறுத் தொண்டர்** குழந்தையை அரிந்து உணவு சமைத்தும், **சண்டேசுரர்** தம் தந்தையின் கால்களை வெட்டியும் வழிபட்டது போல, மற்றும் பற்பல செயற்கருஞ் செயல்களைச் செய்து வழிபடுபவர்களுக்கே, நின் கொழுநன் ஆகிய சிவபெருமான் அருள் புரிவார்! எளியேனால் அத்தகைய செயல்களைச் செய்ய ஒரு சிறிதும் இயலாது. அதனால், யான் அவரை விட்டு விட்டு, நின்னையே அன்புடன் அடைக்கலமாக வந்து புகுந்தேன். என்னைக் காப்பது நின் கடமையே ஆகும். (10)

**மருத நிலமும் உவர் நிலமும்:**

அகிலாண்ட நாயகியே! 'வழிபடும் அடியார்களுக்கு மட்டுமே, யான் திருவருள் புரிவேன். வழிபடாமற் பழிபடும் தீவினையாளர்களுக்கு, யான் அருள் வழங்குதல் இல்லை' என்று கூறி, நீ என்னை வெறுத்து ஒதுக்கிவிட வேண்டா! மேகமானது விளைந்து பயன்படும் நல்ல **மருத நிலத்தில்** மட்டுமே பெய்வதில்லை. பயன்படாத **உவர் நிலத்திலும்** கூட, மேகம் மழை பொழிகின்ற தன்றோ? (11)

**சிபாரிசு செய்யும் திறம்:**

'கொடியவன் ஆகிய இவனுக்கும் அருள் புரிந்தருள்க' என்று நின் கொழுநன் ஆகிய சிவபெருமானுக்கு என்னைக் குறித்துப் பரிவுரை (சிபாரிசு) கூற, நீ நின் அளவில்லாத அருள் காரணமாக எண்ணுவாயானால், ஒன்று செய்தருள்க! சிவபெருமான் நின்னுடைய **ஊடலைப்** போக்குவதற்காக, நின் திருவடிகளில் **விழுந்து வணங்க** முற்படும் பொழுது, என்னைப் பற்றி நீ அவரிடம் பரிவுரை கூறியருளுதல் வேண்டும். அது தான் உடனே பலித்து நிறைவேறும். (12)

["மனைவி உயர்வும் கிழவோன் பணிவும், நினையுங் காலைப் புலவியுள் உரிய" என்னும் தொல்காப்பியச் சூத்திரம், ஈண்டு அறிந்து இன்புறற்பாலது.]

**முத்தொழிற்கும் மூலம்:**

அகிலாண்ட நாயகியே! சிருக்கு (நெய்த் துடுப்பு), ஜெபமாலை, சங்கு, சக்கரம், சூலம் வேல் முதலிய படைகள் பலவற்றையும் நீ ஏந்திக் கொண்டிருக்கும் இயல்பினால், பிரமன் திருமால் உருத்திரன் ஆகிய மும் மூர்த்திகளும் செய்கின்ற மூவகைத் தொழில்களுக்கும் மூலம் நீயே என்பதனை, யான் அறிந்து கொண்டேன். (13)

**தண்டப் படை:**

குற்றியை (வரப்பை) அடைந்த பசும் புல்லை, உழுபவர்களின் கொடிய நாஞ்சிற் படை (கலப்பை) என்ன செய்ய முடியும்? அது போல நின்னையே புகலிடமாக அடைக்கலம் புகுந்த என்னைக் கூற்றுவன் பற்றிய **தண்டம்** ஆகிய படை யாது செய்ய இயலும்? (16)

[தண்டம் (படை), தண்டம் (பயனற்றது) என்பது கருத்து. இஃது ஒருவகைச் சொல்லாட்சி நயம் (Pun) எனப்படும்.]

**நீர்த்திரள்நாதர் அச்சம்:**

அகிலாண்ட நாயகியே! **நீருருவாய்** விளங்கும் திருவானைக்காச் சிவபெருமான், நீருருவாகிய **கங்கை** என்னும் ஒரு பெண்ணை, அயனும் அறியமுடியாத சடைக்காட்டிலே மறைத்து வைத்திருக்கின்றான். அது நினக்கு அஞ்சியே போலும்! இல்லையேல், நினக்குக் கொடுத்த பாதி இடம் போக, மற்றுப் பிறிதொரு பாகம் எஞ்சி இருக்கின்றதே! அதனை அவளுக்கு இடமாகக் கொடுத்திருக்கலாம் அன்றோ! (17)

**தலை அடி சூட்டல்:**

இமய மலையின் அடியிலே உதித்து வளர்ந்து, **வெண்ணாவல்** மரத்தின் அடியில் வாழ்பவர் (ஜம்புகேசுவரர்) ஆகிய பெருமானை மணந்துகொண்ட அகிலாண்ட நாயகியே! அலையின் தன்மையைப் பொருந்தி, மனமானது ஒரு நிலையில் நில்லாமல் அலைந்து திரியும் அடியவன் ஆகிய என்பால் இரக்கம் கொண்டு, என் புல்லிய தலையின் மேல் நின் திருவடி மலரைப் பதியவைத்து, 'பிடி அடி' என்று கூறி வெருட்டுபவன் ஆகிய இயமன் என்னைத் தன் தடியினால் அடித்து வருத்தாமல், அவனிடமிருந்து என்னை விலக்கிக் காப்பாற்றி ஆட்கொண்டருள்வாயாக!

அலையடி யடைந்த அகத்தடி நிலையா
தலையடி யேற்கிரங் குபுபுன்
தலையடி சூட்டிப் பிடியடி என்பான்
தடியடி விலக்கிஆள்! இமய
மலையடி யுதித்து வளர்ந்து, வெண் நாவல்
மரத்தடி வாழ்பவற் புணர்ந்தாய்!
கலையடி யுணர்ந்தார் புகழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே! (18)

**தாய் மருந்துண்டல்:**

'இருவினை யாகிய கயிற்றுற் கட்டுண்டு உழல்கின்ற கொடியவன் ஆகிய இவனுக்கும் அருள்புரிந்தருள்க' என்று என்மீது இரக்கம் கொண்டு, நின் கணவருக்கு வற்புறுத்திக் கூறுக. இங்ஙனம் கூறுதலில் நீ வருத்தம் (சிரமம்) கருதற்க. அது நின்னுடைய அருட்பண்புக்கு அமையாது. குழந்தை அடைகின்ற நோய்களுக்குத் தாயைத் தவிர, **மருந்து** உண்பவர்கள் வேறு யார் இருத்தல் இயலும்!

("பாலுண் குழவி பசுங்குடர் பொறுதென, நோயுண் மருந்து தாயுண்டாங்கு" எனவரும் குமரகுருபரர் திருமொழியை, ஈண்டு நினைவு கூர்ந்து இன்புறுதல் தகும்.)

**அழகிய செயல்:**

எடுப்பது பிச்சை, ஏந்துவது ஓடு, இயக்குவது காளை மாடு, உடுப்பது புல்லிய தோல் எனக் கொண்டுள்ள வறுமை மிக்க ஒருவர்க்கு மனைவியாய் வாழ்க்கைப் பட்டுள்ள நீ, உலகிலுள்ள உயிர்களெல்லாம் வாழுமாறு 32 அறங்களையும் வளர்த்தருள்கின்றாய்! இது மிகவும் வியக்கத்தக்க அழகிய செயலே யாகும். (20)

**சகோரமும் காகமும்:**

அகிலாண்ட நாயகியே! முற் பிறவிகளில் தவம் புரிந்து மலம் முழுவதும் போக்கிக் கொண்ட மோன மெய்ஞ்ஞானியர்களைத் தவிர, மற்றையோர் நின் அருளைப் பெறுதல் இயலுமோ? வானத்தில் உதிக்கும் சந்திரனின் நிலவு ஒளியைச் சகோரப் பறவை தான் கவர்ந்துண்டு களிக்க முடியுமே யன்றி, காகம் அதனை யுண்டு களித்தல் இயலுமோ? (21)

**ஓதிமமும் குரண்டமும் :**

தொண்டு செய்தலை விரும்பி, மனம் முதலிய கருவிகள் அனைத்தையும் நின் திருவடிகளிலேயே செலுத்திவரும் தூயவர்களே யன்றி, மற்றையோரும் தேவர் முதலியவர்களும் கூட நின் திருவடிகளை அடையப் பெறுவார்களோ? அளவற்ற சிறப்பினையுடைய **கங்கை** யாற்றினை ஓதிமம் (அன்னம்) அடைய முடியுமே யன்றி, மற்றைக் குரண்டம் (காகம்) அடையக் கூடுமோ? (22)

**குயிலும் அரிட்டமும் :**

இடையறாத பேரன்பினால் உண்மையுணர்வு கொண்டு நின்னைத் துதிப்பவர்களின் இனிய துதிகளின் முன்னே, உடம்பின் நிழல் போலச் சிறிதும் விட்டுப் பிரியாமல் வினைகள் தொடரப் பெறும் பாவியேன் ஆகிய யான், அன்பு இன்றிப் பொய்யுணர்வு கொண்டு துதிக்கும் புல்லிய துதிகள், தேமாஞ் சோலைகளில் வாழ்ந்து பாடி மகிழும் **குயில்களின்** இனிய குரலின் முன்னே, வெறுப்பினை விளைக்கும் வகையில் மிகவும் இன்னாததாக **அரிட்டம்** (கழுதை) கதறிக் கத்துதலுக்கே ஒப்பாகும். (23)

**கருப்பஞ்சாறு :**

வேதங்களெல்லாம் துதிக்கும் நின்னுடைய சிறந்த புகழை வழுத்திய பெரியோர்களின் நாக்குகள், பிற புல்லிய தெய்வங்களின் புகழையும் கூற முற்படுமோ? இனிமை நிறைந்த கருப்பஞ்சாற்றை விரும்பி யுண்ட நாக்கானது, நிம்ப நெய் (வேப்ப எண்ணெய்)யையும் விரும்புதல் கூடுமோ? (24)

**கோயில் புகாதவர்கள் :**

அகிலாண்ட நாயகியே! நின் திருக்கோயில் புகாதவர்களே, வீடு தோறும் பிச்சைக்குப் புகுவார்கள்; எமன் உலகில் நரகம் புகுவார்கள்! எத்தனையோ பல பிறவிகளை எடுக்கக் கருக் குழிகளில் புகுவார்கள். இத்தகைய தீ வினையாளர்கள் புகாத நின்னுடைய கோயிலில், ஏழையேன் புகுந்து, நின்னைத் தினமும் வணங்க அருள் புரிவாயாக!.

**பரிசன வேதி :**

நினைக்கவும் கூடாத பல கொடிய பாதகங்களை எல்லாம் செய்கின்ற பாதகன் நான்! என்றாலும் நினது திருவருளிற் கலந்தால், யான் புனிதம் (தூய்மை) பெறுதல் அரிதோ? செய்யத் தகாத கொலையைச் செய்கின்ற **வாள்** (இரும்புக் கருவி) தான் எனினும், **பரிசன வேதி** தீண்டுமாயின், அது பொன்னாக மாறுதல் திண்ணமே யன்றோ?

[பரிசனவேதி - இழிந்த உலோகங்களை உயர்ந்த பொன்னாக மாற்றுவது (the Alchemist's stone). இதனை 'இரச குளிகை' எனவும் கூறுவர். சித்தியார்சுபக்கம், 314 : 319.]

**அழத் தெரியாத குழந்தை :**

'அழுத பிள்ளை பால் குடிக்கும்' என்பது உலகில் வழங்கும் பழமொழி. அதற்கேற்ப, நீ **சீர்காழிக்** குழந்தை அழுத போது இனிய முலைப்பாலை அளித்தாய்! குழந்தை அழா விட்டாலும் கூட, இரக்கம் கொண்டு பால் தரும் தாய்மார்கள் உலகத்தில் இருக்கின்றார்கள் அல்லரோ? யான் அழத் தெரியாத சிறு குழந்தையைப் போன்றவன். எளியேற்கும் நீ அருள் செய்தல் வேண்டும். (28)

**யாருக்குப் புகழ் :**

*அழுத குழந்தை ஒன்றுக்கு* **(உப மன்னிய முனிவர்க்கு)** *அம்பலத்தில் ஆடுகின்ற பெருமான் முன்பு ஒரு முறை இனிய பால் அளித்தான். பசித்து அழுத இளங் குழந்தை ஒன்றுக்கு* **(திருஞான சம்பந்தர்க்கு)** *நீயும் முன்பு ஒரு முறை பால் அளித்தாய்! இங்ஙனம் நீவிர் இருவருமே இரு குழந்தைகளுக்கு இனிய பால் அளித்திருக்கின்றீர்! எனினும், நினக்குக் கிடைத்த புகழ்போல, இறைவனுக்குப் புகழ் ஏற்பட்டிருக்கின்றதா? கூறுவாயாக. (29)*

[*"பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்த பிரான்" எனவரும் திருப் பல்லாண்டுப் பாடல் ஈண்டு நினைவு கூர்தற்குரியது.*]

**எது சிறந்தது :**

*இடையறாத அன்பு பெருக நீ பூசை செய்தலால், இனிது உளம் உவந்து சிவ பெருமான் எழுந்தருளி விளங்கும் குளிர்ந்த நிழலையுடைய* **வெண் நாவல்** *மரமோ? அல்லது தேவர்கள் உறைதரப் பெற்ற* **கற்பக மரமோ?** *இரண்டினுள் எது சிறந்தது என்று கூறியருள்க. (30)*

**காடுபுக்க காரணம் :**

*திருமால் முன்பு ஒருகால்* **மோகினி** *வடிவம் எடுத்தார்; தவவலியுடையோர் (தாருகவன முனிவர்கள்) பலரையும் மயக்கினார்; சடைமுடியை யுடைய சிவபெருமான் முன்னே மயங்கினார்; அம்மயக்கத்தில் அவரைப் புணர்ந்து* **ஐயனார்** *என்னும் ஒரு குழந்தையையும் பெற்றார். ஆயினும் அவர் தனித்துக்* **காடுபுக்கு** *வாழ்தலின் காரணம் யாது? தான் காதலித்தவரின் உடலிற் பாதியை நீ கவர்ந்துகொண்டாய் என்பதுதான் போலும்!*



[*"மாயோன் மேய காடுறை யுலகம்" என்னும் தொல்காப்பிய நூற்பாவும், "அங்கண் முல்லையின் தெய்வம் என்று அருந்தமிழ் கூறும் செங்கண்மால்" எனவரும் சேக்கிழார் திருமொழியும் ஈண்டுக் கருதற்பாலன.*] (33)

**எறும்பின் வளை :**

*அகிலாண்ட நாயகியே! 'நம்முடைய கருணையானது சிறந்த தவமுடையவர்களிடத்தில் மட்டுமே பெருகிப் பரவும், புன்மை (இழிந்த) இயல்பு உடையவர்களிடம் சென்று கலவாது' என்று கூறி, என்னை நீ புறக்கணித்தல் வேண்டா. பொங்கி எழுந்து பெருகி ஓடி வரும் வெள்ளமானது, மிகப் பெரிய கடலில் மட்டுமே யன்றி, மிகவும் சிறிய ஓர்* **எறும்பின் வளையினுள்ளும்** *சென்று புகுந்து ஓடிக் கலக்கின்ற தன்றோ! (35)*

**பக்தியில்லாத பாடல் :**

*அகிலாண்ட நாயகியே! மூடன் ஆகிய யான் பாடுகின்ற* **பக்தியில்லாத பாடல்** *மணம் இல்லாத மலர், இனிமை இல்லாத சொல், கண் இல்லாத முகம், பொறுமை இல்லாத தவம், குழந்தை இல்லாத வீடு, தண்ணீர் இல்லாத ஓடை, நீதி முறை இல்லாத அரசாட்சி, சந்திரன் இல்லாத இரவு முதலியவற்றைப் போன்று பயனற்றதே யாகும்.*

நறையிலா மலரோ? நயமிலா மொழியோ?
நயனம்இல் லாதவாண் முகமோ?

பொறையிலாத் தவமோ? மகவிலா மனையோ?
புனலிலா ஓடையோ? நீதி

முறையிலா அரசோ? மதியிலா இரவோ?
மூடனேன் பத்தியில் பாடல்;

கறையிலா வளமை மலிதிரு வானைக்
கா அகி லாண்டநா யகியே (59)

**சிலந்தியின் பந்தர் :**

நற்குணம் இல்லாத யான் பாடுகின்ற பாடல்கள் இனிமை யில்லாதவை என்றாலும், அவற்றை ஏற்றுக் கொண்டு அருள் புரிதல், நினக்கே தக்கதாகும். எளிய சிலந்தி இயற்றிய எச் சிலாகிய நூலின் பந்தரையும், நின் கணவர் ஆகிய சிவபெருமான் விரும்பி ஏற்றுக் கொண்டு அருள் புரிந்தருளினார் ! அந்தப் புராண வரலாற்றை நீ அறிந்திருக்கின்றாய் அன்றோ ?

["சிலந்தியும் ஆனைக் காவில் திரு நிழற்பந்தர் செய்து, உலந்தவண் இறந்த போதே கோச் செங்கணானுமாகக், கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள் குலந்தனிற் பிறப் பித் திட்டார்" எனவரும் அப்பர் தேவாரமும், "தெருண்ட வாயிடை நூல் கொண்டு சித்திரப் பந்தர் சிக்கன இயற்றச் சுருண்ட செஞ்சடை யாய், அது தன்னைச் சோழன் ஆக்கிய தொடர்ச்சி கண்டு அடியேன்," என்வரும் சுந்தரர் தேவாரமும் பிறவும், இங்கு உணர்தற்குரியன.] (60)

**உறுப்புக் குறை :**

பொறுமை இரக்கம் பணிவு அன்பு உபசாரம் ஒழுக்கம் வாய்மை முதலிய பண்புகள் ஒன்றும் இல்லாத குறைகளையுடையவன் யான் ! என்றாலும், யான் நினக்கு அடிமையே யாவன். 'அடிமையல்லன்' என்று நீ என்னைத் தள்ளுதல் கூடாது. உறுப்புக் குறை யுடையவர்களையும் கூட, உலகத்தோர் மக்கட் பிறவியினர் என்றே சிறப்பித்துக் குறிப்பிடுவர். (62)

**ஆரம் பூண்டவன் :**

கிலாண்ட நாயகியே! வெள்ளை நாவல் மரத்தின் கீழ் வீற்றிருப்பவர் ஆகிய சிவபெருமான் (ஜம்புகேசுவரர்) 'ஆரம் பூண்டவன்' என்னும் ஒரு பெயரை முன்பு பெற்றிருக்கின்றார். நீயும் என்னுடைய பாடலை ஏற்று அணிந்து கொள்வாயாயின், 'பாடல் பூண்டவள்' என்னும் ஓர் அழகிய பெயர் நினக்கும் உண்டாகும்.

["ஆரம் நீரோடு ஏந்தினான் ஆனைக்காவு சேர்மினே" எனச் சம்பந்தரும், "ஆரம் கொண்ட எம் ஆனைக்கா வுடை ஆதியை நாளும் ஈரம் உள்ளவர் எம்மையும் ஆளுடையாரே" எனச் சுந்தரரும், திருவானைக்காப் பெருமான் 'ஆரம் பூண்டவன்' எனப் பெயர் பெற்ற செய்தியைக் குறித்திருத்தல் காணலாம்.] (64)

**திருவடி நிழல் :**

சிவபெருமான் வெள்ளை நாவல் மரத்தின்கீழ் உறைகின்றார். அவருடைய ஒரு பாகத்தில் நீ உறைகின்றாய். உன்னுடைய திருவடி நிழலில் எஞ்ஞான்றும் யான் உறையும்படி நீ புரிந்தருளினால், நினக்கு மிக்க புண்ணியம் உண்டு. (65)

**அம்மையின் அருட்டிறம் :**

'தேவியோடு வந்து சிவபெருமான் அடியார்களுக்கு அருள்புரிந்தான்' என்று கூறுகின்றனரே யன்றி, 'உயிர்போன்ற கணவரோடு வந்து அம்மை அடியார்களை ஆண்டு கொண்டாள்' என்று கூறுகின்றவர்கள் இலர். இதற்குரிய காரணம் இன்னதென நீ எனக்கு விளம்பி யருளல் வேண்டும்.

[அருளே வடிவாகிய அம்மையின் தனிமுதன்மைப் பெருஞ் சிறப்பியல்பினை விளக்கியவாறு.] (68)

**பவளவாய் அமிர்தப் பயன் :**

பிரமன் திருமால் இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் நடுங்கும்படி பொங்கி எழுந்த கொடிய நஞ்சினைச் சிவபெருமான் முன்பு அஞ்சாது உண்டருளினான்.

அதற்குக் காரணம், நின்னுடைய பவளம் போலும் திருவாயில் ஊறும் அமிர்தம் விளைக்கவல்ல பயனை, அவன் உணர்ந்திருந்ததே யாகும். இல்லையேல் அக் கொடிய நஞ்சினை யுண்பதற்கு இறைவன் எங்ஙனம் துணிவு கொண்டிருப்பான்?

**அம்மையின் நெற்றிக்கண் :**

ஒளி மிகுந்த சம்புலிங்கேசுவரர் போல நீயும் நெற்றிக்கண் பெற்றிருக்கின்றாய், அவர் தமது நெற்றிக் கண்ணால் மன்மதனை எரித்தார். அம்மா! நீ நின் நெற்றிக் கண்ணால் யாரை எரித்தாய்? பாவியாகிய என்னுடைய பாவங்களை யெல்லாம் எரிப்பாய் எனின், அவரைவிட நினக்குப் பெரிய புகழ் ஏற்படும். (70)

**ஒற்றுமை நயம்;**

அகிலாண்ட நாயகியே! திரிபுர சங்கார காலத்தில் மேருமலையாகிய வில்லைப் பிடித்தவள் நீயே என்று யான் உணர்வேன். ஆனால், உலகிற் சிலர் சிவ பிரான் பிடித்தான் என்று கூறுகின்றார் கள். அவர்களின் கருத்து யாதோ? நீயும் அவனும் ஆகிய இருவீரும் வேறு அல்லீர் என்பதை யுணர்ந்தே, "ஒற்று மை நயம்" பற்றி அவர்கள் அங்ஙனம் கூறுகின்றனர் போலும்! (71)

[சிவபிரான் மேரு மலையை வில்லாகக் கொண்ட போது, அதனைப் பிடித்த இடப்பக்கத்துத் திருக்கை, அம்மையின் பாகத்தைச் சேர்ந்த தாகலின், "நெடுவலி கொடு மாமேருவிற் பிடித் தாய் நீ! அஃது உணர்குவன் யானும்" என்றார். இக்கருத்து, திருநாவுக்கரசு சுவாமிகள் பாடிய "கற்றார் பயில் கடல் நாகைக் காரோணத்து எம் கண்ணுதலே! வில் தாங்கிய கரம் வேல் நெடுங் கண்ணி வியன்கரமே; நற்றாள் நெடுஞ்சிலை நாண் வலித்த கரம் நின்கரமே; செற்றார்புரம் செற்ற சேவகம் என்னைகொல் செப்புமினே?" என்னும் தேவாரத் திருப்பாடலைத் தழுவியது.] அப்பர்

**முயலகனை மிதித்த கால் :**

ஒப்பற்ற தில்லையம்பலம் ஆகிய சபை யில், முயலகன் என்னும் குறட் பூதத் தின் முதுகின் மேல் பதியும்படி செய்தல் தகாது எனக் கருதியே, பேரறிவுடைய சிவபெருமான், வேதம் ஆகிய சிலம்பை அணிந்த கால்களுள், வலக்காலை ஊன்றி இடக்காலை அதிர எடுத்து வீசி ஆடினான். பாண்டிய மன்னன் இதன் அருமை யறிய மாட்டாமல், தவறு செய்தான், எனினும் அப் பிழையை நீ பொறுத்துக் கொண்டாய், அது நின் அருட்டன் மைக்கு அழகே யாகும்.

[இப்பாடல் "கால்மாறி ஆடிய திருவிளை யாடல்" பற்றியது. கணவனை யன்றிப் பிறரைத் தீண்டவும் கற்புடை மகளிர் கூசுவர் ஆதலின், பெருமான் அம்மையின் பாகத்துக்குரிய இடப்பக் கத்துக் காலை, முயலகன் மீது இயைத்திடல் தகாது எனக் கருதி, அவன்மீது தம் வலக்காலை ஊன்றி ஆடினார் என்பது, கவிஞரின் தற்குறிப் பேற்றம். அம்பிகையின் அருளியல்பைப் புலப் படுத்திய தாகவும் கொள்ளலாம்.] (74)

**திருநீறிட்டான் திருமதில் :**

ஒரு கரிய பன்றியின் உருவை எடுத்துக் கொண்டு உன் கணவனின் திருவடி மலரைக் காண விரும்பி, முன்பு திருமால் இப் பெரிய நிலத்தை அகழ்ந்து கொண்டு சென்றனரே, எற்றுக்கு? திருவானைக் காக் கோயிலுள்ள திருநீறிட்டான் திருமதில் அடியினைக் கண்டாற் போது மே! அது செய்திருத்தல் கூடாதா? அவர்

[இறைவன் ஒரு சித்தராகப் போந்து, திருநீற் றையே கூலியாகக் கொடுத்துக் கட்டுவித்த மதில் ஆகலின், திருவானைக்காக் கோயிலின் மதில்,

"திருநீறிட்டான் மதில்" என்னும் சிறப்புப் பெயர் பெற்றது.]

**மெல்லியலா, வல்லியலா ?**

திரிபுரம் எரிப்பதற்காக ஒப்பற்ற பெரிய மேருமலையையே எளிதாகக் குழைத்து வளைத்த வலிமை மிக்கவர் சிவ பெருமான்! அவருடைய நீண்ட பெரிய வலிமை மிக்க தோள்களையே, நின்னுடைய சிறந்த முலைத்தடத்தாற் குழைத்து நெகிழ்வித்தருளிய நினக்கு, "மெல்லியல்" என்னும் பெயர் எவ்வாறு பொருந்தும்? வல்லவனையும் குழைத்த "வல்லியல்" அல்லையோ நீ! (77)

**தலைமதியன் :**

சிவபெருமான் சிதம்பரம் வேய்வனம் திருமுல்லைவாயில் கயிலை ஆகிய தலங்களில் மிகவும் விரும்பி எழுந்தருளி விளங்குகின்றான். அதற்குக் காரணம், சிதம்பரம் நின் இடையையும், வேய்வனம் நின்தோள்களையும், திருமுல்லைவாயில் நின் அழகிய பற்களையும், திருக்கயிலைமலை நின்முலைகளையும் ஒத்திருக்கும் தன்மையே யாகும். சிவபெருமான் "தலைமதியன்" அல்லனோ? அதனால் தான், இவ்வொப்புமைகளை யுணர்ந்து, இத்தலங்களை விரும்பி யருளினான்.

[இடை உண்டோ இல்லையோ என ஐயம் விளைவித்து இரகசியமாய் விளங்குதலின், அதற்குச் சிதம்பரம் ஒப்புமை யுடைதாயிற்று. **தலைமதியன்** என்பது இரட்டுற மொழிதல்; தலையில் மதியை அணிந்திருப்பவன், தலைசிறந்த மதிநலம் வாய்ந்தவன் என இருபொருட் குறிப்புக் காண்க.] (93)

**விதிவிலக்கு இலான் :**

சிவபெருமான் வேதாகமங்களில் 'ஊன் உண்ணற்க' என்று வலியுறுத்தி விதித்திருந்தும், கண்ணப்பர் ஆகிய வேடுவர் அளித்தபோது தானே ஊனைச் சுவைத்து உண்டு மகிழ்ந்தான். அது தான் போகட்டும். 'பெண்கள் மயக்கத்தை விளைப்பவர்கள். அவர்களை விரும்பற்க' என்று அனைவர்க்கும் தானே கூறி வைத்திருந்தும், தான் மட்டும் பெண்ணாகிய நின்னை விரும்பி, நின்பால் மயங்கி, நினக்குத் தன் உடலிற் பாதியையும் கொடுத்துவிட்டிருக்கின்றான். இங்ஙனம் தானே தன் கூற்றுக்களுக்கு மாறாகச் சிவபிரான் நடந்திருத்தலின், அவன் தனக்கு "**விதிவிலக்குகள் இல்லாதவன்**". எனவே, என்னை ஆட்கொள்ளுவதிலும் அவன் விதிவிலக்குகளைக் கவனிக்க மாட்டான். ஆதலின், என்னை ஆட்கொண்டு அருள்புரியும் வண்ணம், நீ அப் பெருமானிடம் கூறிச் சிபார்சு செய்தருள்க (97)

**முடிவுரை :**

உலகப் பெரும் கவிஞர்களுள் தலைசிறந்த ஒருவராக மதிக்கப் பெறுபவர் **வில்லியம் ஷேக்ஸ்பியர்** என்பவர். அவர்தம் அழகிய கவிதைகளை எத்தனையோ பற்பல அறிஞர்கள் ஆராய்ந்து வியந்து பாராட்டி வருகின்றார்கள். அவர்களுள் பேராசிரியர் **டௌடன்** (Prof. Dowden) என்பவர், 'ஷேக்ஸ்பியரின் நூல்கள் தொடக்கத்திற் பற்பல குறைபாடுகளைக் கொண்டனவாக இருந்து, பின்னரே படிப்படியாக வளர்ந்து சிறந்து முதிர்ந்து பெருமையுற்றன' என்று, ஆராய்ந்து விளக்கிக் காட்டியிருக்கின்றார். ஷேக்ஸ்பியரின் நூல்களை அவர் தொழிற்கூடத்தில் (In the workshop), உலகத்தில் (In the world), ஆழத்தினின்று (Out of the Depths), உச்ச

நிலையிற் சென்று (on the Heights) இயற்றப்பட்டன என்று, **நான்கு வகைகள்** அமையப் பிரித்து வைத்து ஆராய்கின்றார். வயதும் அறிவும் அநுபவமும் வளர வளரத்தான், கவிஞனின் கவிதைத் திறம் முதிரப்பெறும் என்பது, அவர் ஆராய்ந்து விளக்கும் அரிய சிறந்த கருத்து ஆகும்.

'அகிலாண்ட நாயகி மாலை' என்னும் இந்நூல், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களால், தமது இளமைக் காலத்திலேயே பாடப் பெற்றிருந்தும், **'இறங்குதுறை நீத்தாயிற்று'** என்பதற்கு ஏற்ப, அவ்விளம் பருவ நிலையிலும், கவிதை இயற்றத் தலைப்பட்ட தொடக்க காலத்திலுமே, அவர் அடைந்துவிட்டிருந்த புலமையின் நிறைவையும், கவிதைத் திறனின் முதிர்ச்சியையும் தெளிவுற விளக்க வல்லதாகத் திகழ்கின்றது. சாத்திரம், தோத்திரம், இலக்கணம், இலக்கியம், கற்பனை, கவித் திறன், சொல்நயம் முதலிய பற்பலவற்றின் சிறப்புக்களும், இந்நூலிற் பொற்புற அமைந்திருத்தல் காணலாம்.

இத்தகைய சிறந்த இந்த நல்ல இனிய நூலை, அம்பிகையின் **துதிநூல்** வரிசைகளுள் ஒன்றுகப் பெரிதும் மதித்துப் போற்றி, நாம் அனைவரும் அன்புடன் ஓதி, நலம் பெற்று உய்ய முயலுவோமாக!

— ஆசிரியர்

---

## இறை பணியாளர் மாற்றங்கள்.

| | பெயர். | இருந்த இடம். | மாற்றப்பட்ட இடம். |
|---|---|---|---|
| 1. | திரு. கே. சிவசாமி. | ஸ்ரீ அருணசலேசுவரர் தொகுதிக் கோயில்கள், தங்கசாலை, சென்னை. | ஸ்ரீ சென்னை ஏகாம்பரேசுவரர் கோயில், தங்கசாலை சென்னை. |
| 2. | திரு, ஏ. சுவாமிநாதன். | ஸ்ரீ சென்னை ஏகாம்பரேசுவரர் கோயில், தங்கசாலை. | ஸ்ரீ அருணசலேசுவரர் கோயில் தங்கசாலை, சென்னை. |
| 3. | திரு. பி. ஷண்முகநாதன். | ஸ்ரீ வேணுகோபாலசுவாமி கோயில், சத்தியமங்கலம், கோபி வட்டம். | ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி கோயில் குமரகோட்டம் மற்றும் அதன் தொகுதிகள், காஞ்சிபுரம். |
| 4. | திரு வி. பழனி | —— | ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள் கோயில், திருக்கண்ணபுரம். |
| 5. | சி. ரங்காச்சாரி ... | ஸ்ரீ சுந்தரேசுவரர் கோயில், கூறைநாட்டுக் கருப்பூர். | ஸ்ரீ அபய வரதேசுவரர் கோயில், அதிராம பட்டினம். |
| 6. | டி. ஆர் ராஜவேலு | ஸ்ரீ அபயவரதேசுவரர் கோயில், அதிராம பட்டினம். | ஸ்ரீ வீரமாகாளியம்மன் கோயில் தொகுதிகள், அறந்தாங்கி. |
| 7. | எஸ். நடராஜன் ... | ஸ்ரீ சங்கமேசுவரர் கோயில், பவானி. | ஸ்ரீ சுந்தரேசுவரர் கோயில், கூறைநாட்டுக் கருப்பூர். |

# "பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்"

**முன்னுரை :**

மாணிக்கவாசகர், தமிழ் நாட்டில் தோன்றி யருளிய சான்றோர்கள் பலருள் ளும் தலை சிறந்த ஒருவர்! அவரை நினைக்கும்போதெல்லாம், அவருடைய ஒப்புயர் வற்ற பக்தியும் ஞானமும் போன்ற உயரிய பண்புகளும், அவர் அருளிச் செய்துள்ள **திருவாசகம்** என் னும் தெய்வத் தமிழ் நூலும் பிறவும், நம்மனோர் நினைவுக்கு வந்து, நம் உள்ளத்தை யெல்லாம் நீராக உருக்கும்.

**மாணிக்கவாசகர் :**

உள்ளம் ஆகிய வயலை, **பக்தி** என்னும் ஏர் பூட்டி உழுது, அதன்கண் **ஞானம்** ஆகிய விதையினை விதைத்து, **கருத் தூற்றம்** என்னும் நீரைப் பாய்ச்சி, மாறி நின்று மயக்கும் கள்ள **ஐம்பொறிகள்** ஆகிய களைகளைப் பறித்து, **சிவானந்தம்** என்னும் சிறந்த பயிரை விளைவித்து, அதனை யாவரும் இனி தறிந்து பெற்றுப் பயன் கொள்ளும் வண்ணம், வலிந்து கூவி அழைத்து, அனைவருக்கும் பகிர்ந்து வழங்கும் மாட்சிமை வாய்ந்தவர் மாணிக்கவாசகர்!

**திருவாசகம் :**

மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம் எத்தகைய பெருஞ் சிறப்பினது என்பது, பொதுவாக யாவருமே அறிந்த தொன்று. அதனை வியந்து போற்றி அகம் மகிழாத சான்றோர்கள் எவரும் இலர்.

சிவபெருமான் ஒரு பெருங் '**கருணைக் கடல்**'. அக் கடலில் 'நலமலி **கங்கை நதி** தலை சேர்ந்து' இருக்கின்றது. சிவ பெருமான் ஆகிய கடலில் இருந்து, **சிவானுபவம்** என்னும் நீரை, மாணிக்க வாசகர் ஆகிய **மேகம்** நிரம்ப முகந்து கொண்டு, பெரு **மழை**யாகப் பொழிந்தது. அதனால் "திருவாசகம்" என்னும் **ஞான வெள்ளம்** எங்கும் பெருக்கெடுத்து ஓடியது. அஃது ஓது பவர்களின் மனம் என்னும் பெரிய சிறந்த **ஏரியிற்** புகுந்தது. அவர்களின் நாக்குஆகிய **மதகில்** நடந்தது. கேட்ப வர்களின் காதுகள் ஆகிய **மடைகளிற்** பாய்ந்தது. அவர்களின் உணர்வு ஆகிய **நிலத்தில்** அழுந்த ஊன்றப் பெற்றிருந்த 'அன்பு' என்னும் **விதையினின்று**, 'சிவம்' என்னும் மெல்லிய **முளை** தோன்றச் செய்தது. சிவம் ஆகிய முளை நன்கு வளர்ந்து, 'திருவருள்' என்னும் **பூ** மலர்ந்தது. அதனில் இருந்து 'வீடு பேற்றின்பம்' என்னும் சிறந்த **பழம்** பழுத்தது.

என்றெல்லாம் பலவகைகளில் சான் றோர்கள் பலரும், திருவாசகம் பற்றிச்

சொல்வும் வியந்து பாராட்டி மொழிந் திருக்கின்றனர்!

**திருச்சிற்றம்பலக் கோவையார்:**

மாணிக்கவாசகர், திருவாசகம் மட்டுமே யன்றி, மற்றுமொரு நூலும் இயற்றியுள்ளனர். அதன் பெயர் "**திருச்சிற்றம்பலக் கோவையார்**" என்பது. 'பாவை பாடிய வாயாற் கோவை பாடுக' எனச் சிவபெருமானே வேண்டிக் கேட்டுக் கொள்ள, மாணிக்கவாசகர் அதனைப்பாடினர் என்பர். சங்ககாலத்துத் தெய்வப் புலவர்கள் பாடிய **அகப்பொருட்சுவையுடன்,** தமக்குக் கைவந்த **அருட்பொருள்** நலமும் அமையும்படி, மாணிக்கவாசகர் பாடிய அந்நூலின் எல்லையற்ற பெருமைகளைச் சொல்லுதல் எளிதன்று! எனினும், அதனுள் ஒரு பாடலினைப் பற்றிமட்டும் ஈண்டுச் சிறிது இயன்றவரை நினைந்து மகிழ்வோம்!

**காக்கை பாடினியார்:**

சங்க காலத்தில் புகழ்பெற்றுத் திகழ்ந் திருந்த பெண்பாற் புலவர்களுள் "**நச்செள்ளையார்**" என்பவர் ஒருவர். 'செள்ளையார்' என்பது அவர்தம் இயற் பெயர். **'ந'** என்னும் அடைமொழிச் சொல், அவருடைய சிறப்பை விளக்கி நிற்பது. **குறுந்தொகை** என்னும் சங்க நூலில் அவர் பாடிய பாடல் ஒன்றினால், அவருக்குக் **காக்கைபாடினியார்** என்னும் ஒரு சிறப்புப் பெயர் அமைந்தது.

**குறுந்தொகைப் பாடல்:**

தலைவியைப் பிரிந்து பிறநாடு சென்று மீண்டு வந்த தலைவன், 'யான் பிரிந் திருந்த காலத்தில் தலைவியைத் துயருறாமல் நன்கு ஆற்றுவித் திருந்தாய்' என்று தோழியைப் புகழ, 'யான் ஒன்றும் செய்திலேன், நின் வருகையை அறிவிப்பது போலக் காக்கை கரைந்த நல்ல நிமித்தம் உணர்ந்து, தலைவியே ஒருவாறு ஆறுதல் அடைந்திருந்தாள்' என்று, தோழி தலைவனுக்குக் கூறுவ தாக அமைந்தது அந்தப் பாடலின் துறை!

**திண்தேர் நள்ளி கானத்து அண்டர்**
**பல் ஆ பயந்த நெய்யில், தொண்டி**
**முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்**
**சோறு**
**எழுகலத்து ஏந்தினும் சிறிது; என் தோழி**
**பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு**
**விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே!**

—குறுந்தொகை, 210.

**பாடலின் திரண்ட பொருள்:**

திண்ணிய தேரையுடைய **நள்ளி** என்னும் வள்ளலின் காட்டிலுள்ள இடையர்களுக்குரிய பல பசுக்களும் கொடுத்த நெய்யுடன், **தொண்டி** என்னும் ஊரிலுள்ள வயல்களில் முற்றும் ஒருங்கே விளைந்த வெண்நெல் அரிசியால் ஆக்கிய புதிய சோற்றை, ஏழு பெரிய பாத்திரங்களில் நிரப்பி ஏந்திக் கொடுத்தாலும், என் தோழியாகிய தலைவியினுடைய பிரிவாற்றுமைத் துன்பம் நீங்கும்படி, தலைவர் ஆகிய விருந்தினர் வரும்படி கரைந்து கூவிய காக்கைக்கு நன்றியாகக் கொடுத்தற்குரிய பலிச்சோறு மிகவும் சிறிய அளவினதாகவே இருக்கும்!

காக்கை நன்னிமித்தம் தோன்றக் கரைந்து, தலைவியின் பிரிவாற்றுமைத் துன்பத்தை ஒருவாறு ஆற்றுவித்தது.

'காக்கையின் உதவி பெரியது' என்பது, இக் குறுந்தொகைச் செய்யுளின் திரண்ட பொருள்.

இந்தப் பாடலின் கருத்தையே, மாணிக்க வாசகரும் தமது திருச்சிற்றம் பலக் கோவையார் என்னும் நூலில், அந்நூலின் இயல்புக்கு ஏற்ப, அகப் பொருட்சுவை அமையத் தழுவிப் பாட நேர்கின்றது.

புலவர் ஒருவர் பாடிய கருத்தையே புலவர் பிறரொருவர் பாட நேருங்கால், அதனை அங்ஙனமே திரும்பப் பாடி விடுவது பெரும்பாலும் புலவர்களுக்கு இயல்பேயாகும்.

**மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை !**
**அன்புடை மரபின்,நின் கிளையோடு ஆரப்**
**பொலம்புனை கலத்தில் தருகுவென் மாதோ !**
**வெஞ்சின விறல்வேற் காளையொடு**
**அஞ்சில் ஓதியை வரக்கரைந் தீமே !**

—ஐங்குறுநூறு, 391

எனச் சங்ககாலப் புலவர் பிறரொருவர் **(ஓதலாந்தையார்)**, நச்செள்ளையார் பாடிய பாடலின் கருத்தையே, ஒரு சிறிது மாற்றம் மட்டுமே தோற்றும் வகையிற் பாடியிருத்தல் காணலாம்.

இக்கருத்தினையே மாணிக்க வாசகரும் பாடநேர்ந்தனராயினும், இவ்வகப் பொருட்டுறைக் கருத்துக்குப் புதுமையும் பொலிவும் பொருளும் பொருந்தும்படி, மாணிக்கவாசகர் பாடியருளி யிருக்கும் திறம், வியக்கத் தக்கதாக விளங்குகின்றது.

**பணங்களஞ் சாலும் பருவர வார்த்தவன் தில்லையன்ன**
**மணங்கொளஞ் சாயலும் மன்னனும் இன்னே வரக்கரைந்தால்**
**உணங்கலஞ் சாதுண்ண லாம்ஒள் நிணப்பலி யோக்குவன் மாக்**
**குணங்களஞ் சாற்பொலி யும்நல சேட்டைக் குலக்கொடியே.**

—திருக்கோவையார் 235.

என்பது மாணிக்கவாசகர் பாடிய பாடல்! கருத்தும் மரபும் பழமையுடையனவே யாயினும், அதனை வெளியிடும் பாடல் அமைப்பில் ஒரு புதுமை இருக்கக் காண்கின்றோம்.

**புதுமைப் பொலிவு :**

முன்னையன இரண்டும் எளிய அகவற் பாக்கள்! இதுவோ **கட்டளைக் கலித்துறை** என்னும் சிறந்த செய்யுள் அமைப்பு! முன்னைய இருவரும் "காக்கை" எனமட்டும் வாளா குறித்தனர். இவரோ, அப்பெயரையே மீண்டும் திருப்பிக் கூறாமல், காக்கைக்குரிய வேறொரு பெயர் ஆகிய **"கொடி"** என்பதனைக் குறிப்பிடுகின்றார். 'காக்கை கரவா கரைந்துண்ணும்' எனத் திருவள்ளுவரும், 'காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்' எனத் தாயுமானவரும் போன்ற சான்றோர்கள் புகழ்ந்தெடுத்துப் போற்றும் தகைமை வாய்ந்தது ஆகலின், காக்கையின் சிறப்பை யுணர்த்துதற்குக் **"குலக்கொடி"** என விதந்தார். (குலம்-மேன்மை). கருத்தின்றிப் பராக்காக இருப்போர் கையிற் பொருள்களைக் கவர்ந்து சென்று விடுதல் போன்ற சில குறும்புகளை ஒரோ வழி செய்வதாயினும், 'ஆகாயத்தோட்டி' என விளங்கி யாவர்க்கும் நலம் விளைவித்தலின், **"நல சேட்டைக் குலக்கொடி"** எனத் **தன்மை நவிற்சியணி** அமையக் கூறியிருத்தலும் நோக்கற்பாலது!

**இரட்டுற மொழிதல் :**

புலவர்கள் சொற்களைக் கொண்டே தம் வித்தகம் புலப்படுத்தும் இயல்பினர். அம்முறையில், இச்சிறு தொடரிலும் மாணிக்க வாசகரின் மாண்பு விளங்கக் காண்கின்றோம்.

'கொடி' என்பதற்கு வேறொரு பொருளும் (விலோதம், Flag) உளதாகலின் அத்திறமும் விளங்கவும்; பாடுதற்கு மேற்கொண்ட, காக்கையின் சிறப்புப் புலனாகவும், அதனைச் **சேட்டா தேவியின்** கொடியாகத் திகழ்வது எனவும் பொருள் படும்படி இரட்டுற மொழிதற் குறிப்பு அமைய, **"நலசேட்டைக் குலக்கொடி"** என்கிறார் மாணிக்கவாசகர்.

ஆசிரியர் திருவள்ளுவர், சேட்டா தேவி (ஜ்யேஷ்டாதேவி, மூதேவி) பற்றித் தம்முடைய திருக்குறள் நூலின்கண், **" செய்யவள் தவ்வை "** (167) என்றும், **" மாமுகடி "** (617) என்றும் குறிப்பிட்டிருப்பது, இயைபுடைமை பற்றி ஈண்டு நாம் அறிந்து இன்புறற்பாலது.

**காக்கையின் குணங்கள் :**

இஃது ஒருபுறம் இருப்ப, இவற்றின் மேலாக மாணிக்க வாசகர் இப்பாடலிற் சிறப்பாகத் தெரிவித்திருக்கும் ஒரு புதிய கருத்தும், நம்மால் மிகமிகப் போற்றற்பாலதாகத் திகழ்கின்றது,

காக்கையைப் பற்றிப் புலவர்கள் பலரும் பாடியிருக்கின்றனராயினும், அதன் குணங்கள் இவையென அறிந்து தெளிவுறப் பாடி யிருப்பார் எவரையும் காண்கிலோம். மாணிக்க வாசகர் ஒருவர் தாம், காக்கையினை **" மாக் குணங்கள் அஞ்சாற் பொலியும் நலசேட்டைக் குலக்கொடி "** எனத் திறம் தெரிந்து தெளிவுற விதந்து குறிப்பிட்டருளி யிருக்கின்றார் !

1. **மறைந்த புணர்ச்சித் தாதல்**
2. **கலங்காமை**
3. **பொழுது இறவாது இடம்புகுதல்**
4. **நெடுகக் காண்டல்**
5. **மடியின்மை**

என்னும் **ஐந்து** குணங்களை யுடையது காக்கை என மாணிக்கவாசகர் கருத்தினை யுணர்த்து, அவர் வழி நின்று உரை வகுத்தவர் ஆகிய பேராசிரியர் விளக்கி யிருத்தல் காணலாம்.

மாணிக்கவாசகர் ஒரு சிறந்த அன்பர்! அடியார்! சிவஞானச் செல்வர்! என்றே நம்மிற் பலரும் அறிவோம். அவர் **பறவை நூல்** வல்ல ஒரு கலைஞரும் (Ornithologist) கூட, என்பது இப்பாடலாற் புலனாகின்றதன்றே ?

**குமரகுருபரர் :**

மாணிக்கவாசகரின் இனைய பல மாட்சிமைகளை யெல்லாம் உணர்ந்தே, அருட்பெருங் கவிஞர் ஆகிய **குமரகுருபர சுவாமிகள்** தாம் இயற்றிய **சிதம்பரமும் மணிக்கோவை** என்னும் நூலின்கண், மாணிக்க வாசகரைப் **"பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்"** எனப் போற்றிப் புகழ்ந்து துதித்து இன்புறுகின்றார்.

**முடிவுரை :**

இத்தகைய பெருஞ் சிறப்பின் மிக்க வித்தகர் ஆகிய மாணிக்கவாசகரையும் அவர் அருளிச் செய்த திருவாசகம்— **திருச்சிற்றம்பலக் கோவையார்** என்னும் இரு பெரு நூல்களையும், நாம் நன்கினிது போற்றியும் ஓதியுணர்ந்தும், நலம் பெற்று உய்ய முயலுவோமாக!

—ஆசிரியர்.

# திருஞான சம்பந்தர் பிள்ளைத் தமிழ்

ஸ்ரீலஸ்ரீ மாணிக்க வாசக ஞான தேசிக சுவாமிகள்

(சிவராஜ யோக மடம், மேலையூர்)

## 5. திருமால்

பூ மன்னும் நான் மறைக் கிழவனை அளித்துலகு
பூத்திடச் செய்த தேவைப்,

பொழி எழிலி நிகர்மேனி வள்ளலைக் கள்ளார்ந்த
பூந்துழாய் மாலை யானை,

மாமன்னி வளரும்மணி மார்பனைப், பாற்கடலில்
வளர்கின்ற செங்கண்மாலை,

மலிதிரைக் கடல்சூழ்ந்த ஞாலம்பு ரக்குமவன்
மாமலர்த் தாள்துதிப்பாம்!

காமன்னும் ஐராவ தக்கடவுள் முந்தைநாள்
கடிகமழ் மலர்ப்பூம் பொழில்

கவினச் சமைத்து இறையை வழிபட்ட மேன்மைசால்
கழுமலப் பதியின் வேந்தைப்,

பாமன்னும் இன்னிசைப் பதிகத்தமிழ்ச்செழும்
பழனத்தில் ஞான அமுதம்

பாய்ச்சிய அருட்கடலை, ஞானஆ ரமுதுண்ட
பாலனைக் காக்க என்றே!

[குறிப்புரை: பூ - தாமரை மலர், நான்மறைக்கிழவன் - பிரமன், அளித்து - படைத்து, பூத்திட - தோன்றும்படி, தேவு - கடவுள், எழிலி நிகர் - மேகம் போன்ற, கள் - தேன், துழாய் - துளசி, மாமன்னி - திருமகள் நிலைபெற்று, கா - கற்பகச் சோலை, ஐராவதக் கடவுள் - தேவேந்திரன், முந்தைநாள் - முற்காலத்தில், கடி - மணம், கவின - அழகாக, கழுமலம் - சீர்காழி, (சீர்காழியில் நந்தவனம் அமைத்துச் சிவபெருமானைத் தேவேந்திரன் வழிபட்டான் என்பது வரலாறு), பழனம் - வயல். 'இனிய இசைப் பதிகம் ஆகிய செழிப்பு மிக்க தமிழ் வயலில், ஞான அமுதம் ஆகிய நீரைப் பாய்ச்சிய அருட்கடல்' என்று சம்பந்தரை ஆசிரியர் வியந்து புகழ்ந்தருள்கின்றார்.]

## 6. குமரவேள்

கற்றைவார் சடையண்ணல் நெற்றிவிழி யிற்பூத்த
கனியை, நற் றமிழ் நாதனைக்,

கலவமா மயில் கடவு குமரவேளைக், குறவி
காதலால் உருகுவானை,

வெற்றிவேல் அமர்செங்கை விடலையை, எனையாண்ட
வீரக் கழற்காலனை,

வெறிகமழ் கடம்பனைக், குஞ்சரிம ணாளனை,
மென்மலர்த் தாள்துதிப்பாம்!

பெற்றியால் முற்றியபெ ருந்தவ மிழைத்தநற்
பெருமாட்டி பகவதியொடும்

பெரிய மறை யோன்எனும் சிவபாத இதயரும்
பெற்றதொரு கற்பகத்தைத்,

தெற்றிதோறு அந்நலார் ஆடல்பயில் காழிவாழ்
திருஞான சம்பந்தனைச்,

செந்தமிழ்க் கவுணியென வந்தெனது சிந்தையமர்
செல்வனைக், காக்க என்றே!

[குறிப்புரை: வார் - நீண்ட, அண்ணல் - சிவபிரான், நற்றமிழ் நாதன் - முருகன், கலவம் - தோகை, கடவு - செலுத்துகின்ற, குறவி - குறத்தி, வள்ளியம்மை, விடலை - காளை, வீரன், கடம்பன் - கடம்பமாலை அணிந்தவன், குஞ்சரி - தெய்வயானை, மணாளன் - மணந்து கொண்ட கணவன். பகவதி, சிவபாத இருதயர் என்பவர்கள் முறையே சம்பந்தரின் தாயும் தந்தையும் ஆவர், தெற்றி - திண்ணை, அந் நலார் - அழகிய நல்ல பெண்கள், கவுணியர் குலத்தில் தோன்றியதனால். சம்பந்தருக்குக் 'கவுணியன்' என்பது ஒரு பெயர். அது 'கவுணி' எனவும் வழங்கப்பெறும்.]

## 7. சித்தி விநாயகர்

சித்தியொ டுந்தழை வல்லபை தோள்புணர்
செல்வவி நாயகனைத்,

திரைநீர் ஞாலத் துயர்நோய் கடியும்
தெய்வமு தற்சுதனை,

அத்திமு கத்தெனை யாளுடை முக்கண்
அடற்கரி யைத்,தொழுவார்

அருவினை போய்அற வரும்ஒரு போதக
அமலன் தாள் பணிவாம்!

தத்தொளி முத்தின் சிவிகை நடத்திய
தமிழ்நா வலரேறைத்,

தடமதில் சூழும் காழிவளம்பதி
தழையும் முதற் குருவைப்,

பத்தித் துறைதர வந்தெனை யாட்கொள்
பரமத யாநிதியைப்,

பாசுரம் ஓதிய பூசுரர் சூளா
மணியைக் காத்திடவே.

[குறிப்புரை : சித்தி, வல்லை என்னும் இருவரும் விநாயகரின் சத்திகள் ஆவர். விநாயகர் வணங்குபவரின் துயரங்களைப் போக்குபவர், சிவபிரானின் முதற் புதல்வர், ஆகலின் "ஞாலத் துயர் நோய் கடியும் தெய்வ முதற் சுதன்" என்றார். ஞாலம் - உலகம், சுதன் - புதல்வன், அத்தி - யானை, கரி - யானை. போதகம் - இளங்களிறு. அமலன் - குற்றம் அற்றவன், மலம் இல்லாதவன். சிவிகை - பல்லக்கு. ஏறு - சிங்கம். சமய குரவர்களுள் முதன்மை மிக்கவர் சம்பந்தர் ஆதலின் 'முதற் குரு' என்றார். பரம - மேலான. தயாநிதி - அருட் செல்வர். பாசுரம் - திருப்பாசுரம், ("வாழ்க அந்தணர்" என்பது). பூசுரர் - அந்தணர்கள். சூளாமணி - தலைமணி போன்றவர்.]

—தொடரும்.

---

## ஆணையர் கலந்து கொண்ட நிகழ்ச்சிகள்

**திருத்தணிகை** — ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி கோயில் மலைச்சாரற் பாதை அடிக்கல் நாட்டு விழா (2—10—64).

**தேனம்பேட்டை** — ஸ்ரீ பாலசுப்பிரமணியசுவாமி கோயில், மதுரை ஸ்ரீமதி சிவானந்த விஜயலக்ஷ்மி அவர்களின் இராமாயணத் திரிவேணிப் பிரவசன நிறைவு விழா (5—10—54).

**பல்லாவரம்** — திரிசூலம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் நவராத்திரி விழா (6 10 64),

**காஞ்சி** — தொண்டைமண்டலாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் பட்டாபிஷேக முதலாண்டு விழா (10—10 64).

**சென்னை** — தியாகராயநகர் சிவவிஷ்ணு கோயில், அருண்மொழியரசு திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களின் பாரதச் சொற்பொழிவு நிறைவு விழா (10—10—64).




ஸ்ரீ சிதம்பரசுவாமிகள், திருப்போரூர்.

# திருவொற்றியூரும் அகப்பொருள் துறையும்

கோவை திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், B.A., B.L.

முற்றத்துறந்த முனிவர்களும் தங்கள் உயர்ந்த கருத்துகளை வெளியிட இலக்கியத்தில் காணும் அகப்பொருள் துறைகளைப் பயன்படுத்திக் கொள்வது தென்னாட்டு வழக்கம். இந்த வழக்கம் பண்டை நாள் முதற்கொண்டு பல நாடுகளிலும் இருந்தது. வடநாட்டு இலக்கியங்களிலும், பிற நாடுகளாகிய யூதேய, உரோமானிய, யவன், இலக்கியங்களிலும் காணலாம். நம் செந்தமிழ் நாட்டில் இவ்வழக்கம் சிறந்த முறையில் கற்றோர்களால் கையாளப் பட்டுள்ளது. அகப்பொருள் துறையில் சிற்றின்பச் செயல்களையும் சொற்களையும் எடுத்தாண்டு பேரின்பத்தை விளக்க வைப்பது ஒரு பண்டைய வழக்கம். இந்த முறையில் இன்பக் கருத்துகளை ஒரு உவமையாகத் தான் நாம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

கோவை, உலா, அந்தாதிகளிலே தமிழ் இலக்கியங்களில் அகத்துறைப் பகுதி ஆங்காங்கு எடுத்தாளுவது உண்டு, பதினோராம் திருமுறையிலே சேரமான் பெருமாள் நாயனாரால் அருளிச் செய்த பொன்வண்ணத் தந்தாதி, மும்மணிக் கோவை, ஞான உலா என்ற அரிய பிரபந்தங்களில் அகத்துறைகள் மலிந்து கிடக்கின்றன. மேலும் கடுந்துறவியாகிய பட்டினத்துப் பிள்ளையார் அருளிய நூல்களிலும் அகத்துறைப் பகுதிகளைக் காணலாம். 'திருவிடைமருதூர் மும்மணிக்கோவை' 'திருவேகம்பமுடையார் திருவந்தாதி' முதலிய பிரபந்தங்களில் வெகு அரிய அகத்துறை மணிகளைக் காணலாம். பட்டினத்தார் அருளிய இறுதிப்பிரபந்தம் "திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது" ஆகும். அதில் உள்ள உலகியற் கருத்துக்கள் மிக அருமையானவை, இறைவனைப் பற்றிப் பாடுகையில், உலகியல் அறிவை எடுத்தாளுவது அற்புதமாகும்.

திருவொற்றியூரே தமது இறுதித்தலம் என்று அறிந்து பட்டினத்தார் அதனை ஒரு வெண்பாவில் குறித்திருக்கின்றார்.

"ஒடுவிழுந்து சீப்பாயும் ஒன்பது வாய்ப் புண்ணுக்
கிடுமருந்தை யானறிந்து கொண்டேன் - கடுவருந்தும்
தேவாதிதேவன் திருவொற்றியூர்த் தெருவில்
போவார் அடியிற் பொடி".

என்று பாடிவிட்டு, அங்கேயே, இறுதி நாட்களைக் கழித்து, அவர் ஒடுக்கத்தில் அமர்ந்தார் என்ப துவரலாறு.

துறவியாயிருந்தும் அகத்துறையில் ஏன் பாடினார் எனக் கேள்வி பிறக்கும் அல்லவா? பேரின்பத்தை எழுத்தால் எழுதமுடியாது, அதன் பொருட்டுச் சிற்றின்ப மொழியால் விளக்குவது வழக்கம் எனக்கூறலாம். அகத்துறையில் வரைவது தமிழ்மொழியின் தனிப்பட்ட ஒரு பெருமை என்று விடை பகர்வதுவே சரி என்க.

இனி திருவொற்றியூரைப்பற்றிப் பாடிய பெரியார்கள் எல்லாம் அகத்துறையை ஒட்டிப் பாடுவதைக் காண்கிறோம். அதற்குக் காரணம் என்னவென்று மனத்திற் சிந்திப்போம். கடற்கரையில் அருமையான காற்று வீசும்படியான இடம். எங்கு பார்த்தாலும் தென்னஞ் சோலைகள், அரிய தடாகங்கள், பழமரங்கள் நிரம்பிய தோப்புக்கள், கோயில்கள் நிரம்பிய புனித இடங்கள்! அன்பர்கள் தவம் செய்யும் பூவனங்கள் முதலான அருமை இடங்கள் நிரம்பியுள்ளதால், மனத்திற்கு மகிழ்ச்சி உண்டாகக்கூடும். இந்தக் காரணங்களால் அகத்துறைக்கு ஏற்ற இடம் என்று கூறலாமோ?

சென்ற நூற்றாண்டில் தமிழ் நாட்டில் தோன்றிய மிகச் சிறந்த சமயக்கவிஞர் வள்ளலார் என்ற இராமலிங்க அடிகள் ஆவர். அன்னார் இயற்றிய ஆயிரக்கணக்கான பாடல்களில் இங்கிதமாலை என்ற அரிய அகப்பொருள் நூல் ஒன்று உண்டு. அந்நூலில் உள்ள நூற்றி யறுபத்தைந்து பாடல்களும் திருவொற்றியூர்ப் பெருமானைப்பற்றியே ஆகும். ஒரு தலைவி தோழியை விளித்துத் தன் நெஞ்சில் எழுந்த வினைவைக் கூறி அதற்கு விடையாகப் பெருமான் என்ன கூறுகிறான் என்று தான் கருதுவதாக எழுவது பாடல்களில் அடிப்படைக் கருத்து. அவ்வாறு சொல்லுகையில் பாடல்கள் எல்லாம் (வெகு நுட்பமாகச் சிலேடை அல்லது) இரண்டு பொருள்கள் தொனிக்கும்படி வைத்துப் பாடப்பட்டுள்ளது. சிலேடையின் நயம் வெகு உயர்ந்தது. சிற்றின்பம் உட்கிடையாக இருப்பது சிறிதுகூடத் தெரிவதில்லை.

இங்கு இரண்டு எடுத்துக் காட்டுக்களை மட்டும் கூறுவோம்.

"ஊரூர் இருப்பீர் ஒற்றிவைத்தீர்
ஊர்தான் வேறுண்டோ என்றேன்
ஓரூர் வழக்கில் கரியையிறை
யுன்னி வினவும் ஊரொன்றே,
பேரூர் தினையூர் பெரும்புலியூர்
பிடவூர் கடவூர் முதலாக
ஆரூர் அனந்தம் என்கின்றார்
இதுதான் சேடி என்னே. (98)

கொன்றைச் சடையீர் கொடுங்கோளூர்
குறித்தீர் வருதற் கஞ்சுவல் யான்
ஒன்றப் பெருங்கோள் என்மீதும்
உரைப்பா ருண்டென் றுணர்ந்தென்றேன்
நின்றப் படியேற் கோளிலியாம்
நகரும் உடையேம் நங்காய் நீ
இன்றச் சுறல்என் என்கின்றார்
இதுதான் சேடி என்னேடி. (160)

உ. இச்செய்யுட்களில் வரும் சிலேடைகளைக் கண்டு அகமகிழ்க. இறைவர் எழுந்தருளியிருக்கும் புனிதத்தலங்களைச் சொல்லி வினுவிடையாகக் கூறும் அருமைகளைக் கண்டு மகிழ்க. இறைவன் ஊர் கொடுங்கோள் ஊர் ஆக இருக்க, என்மீது கோள் உரைத்தல் எளிதே அவர்க்கு என்று கூறுகையில், கோள் இலியாக அவர் ஊர் இருத்தலை, அதற்கு விடையாகச் சொல்லுதல் மிகப் பொருத்தம் அன்றோ!

இங்கிதமாலையில் உள்ள 165 பாடல்கள் அனைத்தும், இறைவர் பிச்சாடனத் திருவிளையாட்டை மேற்கொண்ட காட்சியை முன்னிட்டு அகப்பொருள் துறையில் கூறினவையேயாகும். இவ்வாறு அகப்பொருள் துறைக்குத் திருவொற்றியூரை அடிப்படையாக வைத்துப் பாடினதற்கு என்ன காரணம் என்ற ஒரு சிந்தனைக் கேள்வி தோன்றலாம். தலப்புராணத்தில் எழுந்ததோ, தலத்தின் இயற்கை எழிலில் தோன்றியதோ, கவிஞர் பெருமான் உள்ளத் தெழுச்சியில் தோன்றியதோ, ஆராய்ந்து அறிக.

திருவொற்றியூர் சென்றபோது அப்புனிதத் தலத்தே எழுந்தருளிய மூர்த்தியைக் கண்டு அகப்பொருள் துறையில் வெகு உருக்கமாகப் பாடிய முற்றத்துறந்த முனிவர், அப்பர் அடிகள் ஆவர். அவர்கள் 80 ஆண்டு உலகில் வாழ்ந்து மிகமிக அரிய கருத்துக்களைப் பொழிந்தருளிய பெரியார். அவர்கள் திருவொற்றியூர் சென்றருளியபோது பங்குனி உத்திரப் பெருவிழா ஆகும். அதனைத்தாமே,

"மத்தமா களியானை உரிவை போர்த்து
வானகத்தார் தானகத்தார் ஆகி நின்று
பித்தர்தாம் போலங்கோர் பெருமை பேசி
பேதையரை அச்சுறுத்திப் பெயரக் கண்டு
பத்தர்கள் தாம் பலருடனே கூடிப் பாடிப்
பயின்றிருக்கும் ஊரேதோ பணியீர் என்ன
ஒத்தமைந்த உத்தரநாள் தீர்த்த மாக
ஒளிதிகழும் ஒற்றியூர் என்கின் றாரே."

என்று அழகாகக் கூறுகின்றார்.

இந்த அருட்பாடலைப் படித்தால், அந்தப் பெருந் திருவிழாவில் எழுந்தருளிய மூர்த்தி

பிச்சாடன மூர்த்தியாக இருக்கக்கூடும் என்று ஊகிக்கலாம். அவ்வூர்த் திருக்கோயில் பிச்சாடன மூர்த்தி வெகு அழகாகக் குறிப்பைக் காட்டிக் கொண்டு இருக்கின்றார்போலும்! இங்கிதம் (குறிப்பு) அவ்வாறாக இருக்கவேண்டும் என்று ஊகிக்கலாம். இதனைப் பின்பற்றியே, அப்பருடைய சொற்களையே தமது பாடலுக்கும் எடுத்தாண்ட பிற்கால வள்ளலார், இங்கிதமாலை என்று பெயரிட்டார் போலும்! அப்பருடைய மற்றொரு பாடலையும் பார்ப்போம்.

"வல்லாராய் வானவர்கள் எல்லாம் கூடி
வணங்குவார் வாழ்த்துவார் வந்து நிற்பார்
எல்லேஎம் பெருமானைக் காணும் என்ன
எவ்வாற்றால் எவ்வகையால் காணமாட்டார்
நல்லார்கள் நான்மறையோர் கூடி நேடி
நாமிருக்கும் ஊர்பணியீர் அடிகேள் என்ன
ஒல்லைதான் திரையேறி ஓதம் மீளும்
ஒளிதிகழும் ஒற்றியூர் என்கின் றாரே."

இச்செய்யுளையும் பாருங்கள்! சொல்லும் பொருளும் ஒத்திருக்கக் காணலாம். ஆகவே வள்ளலாருடைய இங்கித மாலைக்கு மூலமாக இருந்த அடிப்படைக்கருத்துக்கள் அப்பருடைய தேவாரப்பாடல்கள் ஆகும் என்றால் மிகையாகாது. ஆகவே அப்பர் அடிகள் வாழ்ந்த 6, 7ஆம் நூற்றாண்டு முதற்கொண்டே, திருவொற்றியூர் அகப்பொருள்துறை இலக்கியத்திற்கு ஒரு அடிப்படைத்தலமாக இருந்தது எனலாம். அந்தச் சிறப்பு அக்காலம் முதல் பட்டினத்தார் காலமாகிய 10ஆம் நூற்றாண்டு வரையிலும் விளக்கமாக இருந்து, 19ஆம் நூற்றாண்டிலும் (வள்ளலார் காலம்) மிகச் சிறப்போடு ஆதரவு பெற்றிருக்கிறது என்று திண்ணமாகக் கூறலாம்.

மேலும் அகப்பொருள் துறைக்கு அடிப்படைக் காரணமாக உள்ள பிச்சாடன மூர்த்தித் திருவுருவம், தமிழ் நாட்டுப் பல கோயில்களில் இருப்பது போல, கோவைக்கு அடுத்த திருப்பேரூரிலும் இருக்கிறது. அக்கோயிலில் கனக சபை மண்டபத்தில் ஒரு தூணில் மிக அழகுடன் அவ்வுருவம் சித்திரிக்கப்பெற்றிருக்கிறது. அவ்வுருவம் ஒப்பற்ற வடிவில் இருப்பதினால் இங்கே எடுத்துக்காட்டப்பெற்றிருக்கிறது. இவ்வுருவத்தைப்பார்க்கின் அப்பரும் வள்ளலாரும் கொண்ட கருத்தை மட்டும் அன்றி, கச்சியப்ப முனிவர் சிவப்பிரகாசர் கொண்ட கருத்துக்களுக்கிணங்க இருப்பதினால் திருவொற்றியூரிலும் இவ்வாறு இருக்கக்கூடும் என்று கூறலாம். *

---



சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக் கலியாண மண்டபம், **திருவொற்றியூர்**

## ஆணையர் கலந்து கொண்ட நிகழ்ச்சிகள்

சென்னை — தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையம், நவராத்திரி விழா (11—10—64)

திருநெல்வேலி — ஸ்ரீ பிள்ளையன் கட்டளைச் சித்த வைத்தியசாலைத் திறப்பு விழா (16—10—64).

சங்கரநயினார்கோயில் - தமிழ்ச் சங்க விழா (18—10-64).

---

## நடைபெற்ற நிகழ்ச்சிகள்

ஒப்பிலியப்பன் கோயில் : புரட்டாசி மாதப் பிரமோற்சவம்.

பொள்ளாச்சி : கன்னிகா பரமேசுவரியம்மன் கோயில் நவராத்திரி விழா.

பழநி : ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி கோயில், அலுவலகம் - பண்டக சாலைத் திறப்பு விழா (11—10—64).

ஸ்ரீ கள்ளழகர் : தொகுதிக் கோயில்கள், "சாரங்கபாணி இல்லம்" திறப்பு விழா (11—10—64)

கம்பம் : ஸ்ரீ கம்பராயப் பெருமாள் கோயில் தொகுதிகள்—நவராத்திரி விழா.

திருநெல்வேலி : நெல்லையப்பர் கோயில்—ஐப்பசித் திருவிழா.

தென்காசி : விசுவநாதர் கோயில்—திருப்பணித் தொடக்கவிழா (19—10—64).

தருமபுரி : ஸ்ரீ பரவாசு தேவர், மல்லிகார்ச்சுனர் கோயில்கள்—முதலமைச்சர் வருகை (15—10—64)

கோவில்பட்டி : பூவண்நாத சுவாமி கோயில் - திருக்கல்யாணத் திருவிழா.

சின்னமனூர் : ஸ்ரீ பூலாநந்தீஸ்வரர் கோயில் — முதலமைச்சர் வருகை (14—10—64).

திருச்செங்கோடு : ஸ்ரீ அர்த்தநாரீசுவரர் கோயில், கோடி அர்ச்சனை நிறைவு விழா (17—9—64).

சோழவந்தான் : ஸ்ரீ ஜனக நாராயணப் பெருமாள் கோயில், திருப்பணித் தொடக்க விழா (27 8—64).

சென்னை : வண்ணையம்பதி காமாட்சியம்மன் கோயில் : திரு S. R. கணபதி செட்டியார் அவர்கள் பாடிய "ஸ்ரீ காமாட்சியம்மன் அந்தாதி" - கவிதை நூல் அரங்கேற்று விழா (16—10—64).

---

# பன்னிரு திருமுறைப் பாராயண விழா

## (ஏழாவது ஆண்டு)

திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி கோயிலில்,

10—9—64 முதல் 4—1—65 முடிய,

**திருவாவடுதுறை ஆதீனம்**

குரு மகா சந்நிதானம் **ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள் அருளாணையின் வண்ணம், மிகவும் சிறப்புற நடைபெறும்.

# திருத்தணிகை ஆற்றுப்படை

டாக்டர் மா. இராசமாணிக்கனூர், M.A., L.T., M.O.L., PH. D.

## முகவுரை

திருத்தணிகையில் கோயில் கொண்டுள்ள முருகப்பெருமான் திருவருளால் நோய் நீங்கப் பெற்ற ஒருவன், நோயால் துன்புறும் மற்றொருவனை அப்பெருமானிடம் ஆற்றுப்படுத்தும் முறையில் பாடப்பெற்றுள்ள நூல் திருத்தணிகை ஆற்றுப்படை எனப் பெயர் பெற்றது. இதன் ஆசிரியர் கச்சியப்ப முனிவர் என்பவர்; சிவஞான முனிவரின் மாணவர்; கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர்.

இவர் மாணவருள் ஒருவர் கந்தப்பையர். அவர் வயிற்றுக் குன்ம நோயால் வருந்தினர். ஆசிரியர் அந்நோய் தீர அவரைத் திருத்தணிகை முருகனிடம் ஆற்றுப்படுத்தும் முறையில் இந்நூலைப் பாடினர். கந்தப்பையர் திருத்தணிகை முருகன் திருமுன் இருந்து இந்நூலைப் பாராயணம் செய்து நோய் நீங்கப் பெற்றுர் என்பது வரலாறு. இந்நூல் 1911 இல் அச்சு நூலாக வெளி வந்தது. இது சங்ககால ஆற்றுப் படைப் பாடல்களைப் போலவே அகவற் பாவில் அமைந்துள்ளது; 418 அடிகளையுடையது. புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியார் என்பவர் இதற்கு விருத்தியுரை எழுதியுள்ளார்.

## நூல் நுதல்பொருள்

சிவன் சங்கப்புலவராய் வீற்றிருந்தமை (வரி 1-16), செல்வம் நிலையாமை (17-38), பொதுமகளிர் வருணனை (39-82), அவரது கூட்டுறவால் உடல் மெலிதல் (84-96), நோயுற்றவன் மந்திரம் தந்திரம் முதலியவற்றுல் நோயைப் போக்க முயலுதலும், புதிய நோய்கள் பெருகுதலும், செல்வம் தேய்தலும் மருத்துவன் அகலுதலும் (97-173), கண்ட தீர்த்தங்களில் நீராடியும் கண்ட தெய்வங்களை வழிபட்டும் நோய் நீங்காது வருந்தி, உற்றுர் உறவினரை விட்டகன்று, கொடிய பாலையில் கால்கள் கொப்புளிக்க நடந்து வருந்துதல், முருகன் அருளால் நோய் நீங்கப்பெற்ற ஒருவன் மேலே கூறப்பெற்றவாறு வருந்தும் நோயாளனைக் கண்டு தனது வரலாற்றைக் கூறத் தொடங்குதல் (174-6);

விஷக்கடி உண்டவர், பேய் பிடித்தவர், பித்துப் பிடித்தவர், நற்குணம் இழந்தவர், ஆகிய பலவகை நோயாளர், கல்வியைக் காதலித்தவர், மக்கட்பேறு வேண்டுவோர், செல்வம் விரும்புவோர், நாட்டு அரசியலில் உயர்வு வேண்டினோர், பெண்ணாசையாளர், பேரின்பம் விழைவோர், ஆகியோர் தம் தேவைகளை வேண்டித் தணிகை நோக்கிப் பயணமாதல், ஆற்றுப்படுத்தும் நோயாளன் அவர்களோடு கலந்து தணிகை நோக்கிப் புறப்படல் - அவ்வளவில் அவனது துன்ப நோய் சிறிது ஒழிதல் (177-204);

திருத்தணிகையை அடைந்ததும் அவனுக்குப் பாதிநோய் நீங்கல் (205-214), தணிகையில் பல தீர்த்தங்கள் - அவன் அவற்றில் முழுகாமல் சரவணத் தடாகத்தில் மட்டும் மூழ்கி மலைமேல் ஏறி அங்குள்ள சுனையைக் கண்டு வணங்குதல் (215-226), முருகனை வழிபடும் அடியார் வீதியில் புரண்டு போதல், ஆற்றுப்படுத்தும் நோயாளன் ஒதுங்கிச் சென்று திருவீதி வலம் வந்து, எள்விழ இடமில்லாது அடியார் நெருங்கியிருக்கும் கோவில் வாயிலில் நுழைதல் (227-232);

வள்ளியின் மணத்தை முடித்த கள்ள விநாயகர், வீரவாகு முதலிய நவவீரர், பரிவாரதெய்வங்கள்,

வள்ளியுடனும் தெய்வயானையுடனும் இருக்கும் முருகன் ஆகிய பல தெய்வங்களைப் பலரும் தரிசித்தல், இவன் தரிசித்தவுடன் நோய் முற்றும் நீங்கி நாற்பொருளும் தாமே வந்து நிரம்பப் பெறுதல் (233 257), இவன் முருகன் அருளை வியந்து மயக்க நிலையில் செய்வகை தோன்றாது நிற்றல், முருகன் இவனுக்குத் திருநீறும் சந்தனமும் அளித்தல், உலகை அவனிடம் அகப்படவைத்துத் தனது நிலையில் நீக்கமுறாமல் வைத்துப் பிரியா விடை தருதல், அந்நிலையில் இவன் திரும்பி வருதல் (258—273);

இங்ஙனம் திரும்பி வந்தவன் புதிய நோயாளனைக் கீழ்வருவன கூறி அம்முருகனிடம் ஆற்றுப் படுத்துதல் :

முருகன் திருவிளையாடல்களையும் அவனது முழு முதற் கடவுள் தன்மையையும் புதியவனுக்குக் கூறுதல் (274 - 321); அவனை வழிபடின், நோய்க்குக் காரணத்தையும் நீக்கி நாற்பேறுகளையும் அவன் கருதிய அளவினும் எண் மடங்கு மிகுதியாகத் தருவான், அகம்படித் தொழிலில் நிலைநிறுத்துவன் என்று கூறுதல் (322 329);

பின்பு திருத்தணிகையின் சிறப்பினைக் கூறுதல்: நடன மகளிர் நடனத்தாலும், கோபுரம் மாளிகை முதலியவற்றாலும், பல மலைகள் அங்குத் தவம் கிடத்தலாலும், முருகனே சிவனுக்குக் கோயில் கொண்டுள்ள 'வீரட்டம்' என்னும் சிவன் கோவிலாலும், ஆறுமுகங்களோடு கோயில் கொண்டுள்ள 'கீழ்க்கோட்டம்' என்னும் முருகன் கோவிலாலும் திருத்தணிகை சிறந்துள்ளது (330—344); நந்தியாற்றுப் பாய்ச்சலால் வளர்ந்த மரங்களும் பயிர்களும் கொண்ட மருதவளம் திருத்தணிகையை ஒருபால் அழகு செய்தல், மற்றொருபால் முல்லைநிலச்செழிப்பு அழகுசெய்தல், சோலைகளின் வளம் (345 - 380).

மூங்கிலிலிருந்து வெளிப்படும் முத்து, யானைத் தந்தத்திலிருந்து வெளிப்படும் முத்து, மலைகள் மீதுள்ள மாடமாளிகைகள், தேர்கள், விமானங்கள் முதலிய வளங்களை உடையது திருத்தணிகை; அங்கிருந்து புறப்படும் அகிற்புகையும் கற்பூரப் புகையும் விண்ணிற் புகுந்து தேவரை இமைக்கச் செய்தல் — அங்காடி வீதியின் அழகும் பிற வளமுள்ள வீதிகளின் அழகும் மக்களைக் கண் இமையாமல் செய்தல்—இவ்வாறு மண்தலம் விண்தலமாகவும், விண்தலம் மண்தலமாகவும் மாற்றும் நிலையில் திருத்தணிகை அமைந்துள்ளமை, திக்குப்பாலகர், தேவர், பிரமன், நெடுமால் முதலியோர் வரிசை வரிசையாக நின்று முருகனைத் துதித்தல் - ஒவ்வொரு நாளும் திருத்தணிகையில் திருமணம் அல்லது கோவில் விழா நடப்பது இயல்பு —இத்தகைய சிறப்புடைய திருத்தணிகை மலைக்கு உரியவன் முருகப் பெருமான் (381 - 418).

## நூலின் சிறப்பியல்புகள்

திருமுருகாற்றுப்படையின் இறுதி,

"பழமுதிர் சோலை மலைகிழ வோனே," என்று முடிகின்றது. இத்திருத்தணிகை ஆற்றுப் படையின் இறுதியும்.

"நிலைபெறு தணிகை மலைகிழ வோனே" என்று முடிகிறது. இவ்வாற்றுப் படையின் நடை, திருமுருகாற்றுப்படையின் நடையைவிடச் சில இடங்களில் கடினமாக வுள்ளது; ஆயினும் உயர்ந்த செந்தமிழ் நடை.

வருணனை

வருணனைப் பகுதிகள் இந்நூலின் சிறப்பியல்புகளுள் சிறப்புடயவை. பொது மகளிரைப் பற்றிய வருணனை (39 - 82), திருத்தணிகையைப் பற்றிய வருணனை) 330 - 418) ஆகிய இரண்டும் ஆசிரியரது கற்பனைத் திறனை அளவிட உற்ற சான்றுகளாகும். பொதுமகளிருடைய கூந்தல், நுதல், கண், வாய், பல்வரிசை, முகம், தோள், மார்பு, வயிற்று மயிர் ஒழுங்கு, உந்தி, இடை, தொடை, அடிகள், சாயல் முதலியன சிறந்த முறையில் வருணிக்கப் பட்டுள்ளன.

76-ம் பக்கம் பார்க்க

# தொண்டை நாட்டுத் திருப்பதியநுபவம்

மகாவித்துவான் P.B. அண்ணங்கராசார்ய சுவாமிகள், காஞ்சிபுரம்.

(முன் இதழ்த் தொடர்ச்சி)

வேதாந்த தேசிகனும் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் "தத்தத் கர்மாநுரூபம் பலவித ரணத:" என்று இவ்வர்த்தத்தையே வெளியிட்டருளினர். ஆகவே ஆழ்வார் திருவுள்ளத்தால் உலகு என்பதற்கு சாஸ்த்ர மென்னும் பொருள் தேறிவிட்டபடியால் இதையடியொற்றியே ஸ்வாமி பாஷ்யகாரர் ப்ரக்ருத கீதா ச்லோகத்தில் ("அதோஸ்மி லோகே வேதே ச") என்ற விடத்தில் லோக சப்தத்தை சாஸ்த்ர பரமாக நயிப்பித்தருளினரென்று அறியக்கிடக்கிறது. இந்த கீதா ச்லோகத்தை அப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளையும், வடக்குத் திருவீதிப் பிள்ளையும் எடுத்துக் காட்டியுமிருக்கிறார்கள்.

எம்பெருமானருக்கு முன்னே ஆளவந்தாரும் லோக சப்தத்தை சாஸ்த்ர மென்னும் பொருளில் ப்ரயோகம் செய்தருளினர். ஸ்தோத்ர ரத்நத்தில் (23)* ந நிந்திதம் கர்மததஸ்தி லோகே* என்ற விடத்திற்கு வியாக்கியானஞ் செய்தருளா நின்ற பெரியவாச்சான் பிள்ளை "ஆயிரமடங்கு என்னால் பண்ணப்படாதது யாதொரு நிந்தித கருமமுண்டு அதிபாதக மஹாபாதகாதிகள். அது சாஸ்த்ரத்திலு மில்லை;.......அநுஷ்டாதாக்கள் பக்கல் இல்லாத நிஷித்தங்களும் சாஸ்த்ரத்தில் காணலாமிறே" என்று அருளிச் செய்திருக்கிறார். தேசிகனும் ஸ்தோத்ர பாஷ்யத்தில் அவ்விடத்தில், இப்பொருளையே வற்புறுத்தியருளிச் செய்தார். இவற்றால் ஆளவந்தாரும் லோக சப்தத்தை சாஸ்த்ரபரமாகவே கொண்டாரென்று விளங்கா நின்றது. இப்படி ஆளவந்தாரும் எம்பெருமானரும் கொண்டது ஆழ்வாரருளிச் செயலை அடியொற்றியே யென்பது நிஸ்ஸந்தேஹம். ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளில் ப்ரவேசமற்ற மற்றையோர்கள் எங்கும் லோக சப்தத்தை இங்ஙனே உபதேசங் கொள்ளக் காணாமையாலே. இனி அடுத்த அத்யாயத்திற்குச் செல்வோம்.

பதினாருமத்யாயத்தில் தேவாஸுர விபாகம் முக்கியமானது. தைவப் பிறப்பு அஸுரப் பிறப்பு என்று பிறப்பிலேயே இருவகையுண்டு. (16:6)* த்வௌ பூத ஸர்க்கௌ லோகேஸ்மிந் தைவ அஸுர ஏவச* என்று, உலகத்திலுள்ள பிராணி வர்க்கங்களை யெல்லாம் இரண்டே வகுப்பாக வகுக்கிறான் கீதாசார்யன். தைவ வகுப்பு ஒன்று, அஸுர வகுப்பு மற்றொன்று. இதைப் பற்றிச் சுருக்கமாகத் தெரிந்து கொள்ளவேணுமானால்* தைவீ

ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாய ஆஸுரீமதா (16-5) என்கிற வொரு பாதி ச்லோகத்தை மனனம் பண்ணினுற் போதும். ஸம்ஸார பந்தத்தில் நின்றும் விடுபட்டு ஸத்கதியை யடையும் வழியைச் சிந்தனை செய்யும் வகுப்புதான் தெய்வவகுப்பெனப்படுவது. அப்படிப் பட்ட சிந்தனை யின்றிக்கே அதோ கதியை யடையும் வழியைத் தேடும் வகுப்பு தான் ஆஸுரவகுப்பெனப் படுவது. இங்ஙனே சொன்னதைக் கேட்டவுடனே அர்ஜுநனுடைய முகத்தில் துக்கக்குறி காணப்பட்டது. நம்மைக் கண்ணபிரான் தைவ வகுப்பில் சேர்த்திருக்கிருனே அஸுர வகுப்பில் சேர்த்திருக்கிருனே தெரியவில்லையே என்று அர்ஜுநன் கவலையுற்று நின்றுன். அதை யறிந்த கண்ணபிரான் உடனே யருளிச் செய்கிருன்—மாசுசஸ் ஸம்பதம் தைவீம் அபிஜாதோஸி பாண்டவ* என்கிருன், அப்பா! நீ கவலை கொள்ளாதே, நீ தெய்வ வகுப்பில் சேர்ந்தவனே யென்று கூறி அவனைப் பரமானந்தப்படுத்துகிருன். தான் செய்யும் உபதேசங்களை அவன் ருசி விஸ்வாஸங்களோடு கேட்டுக்கொண்டிருப்பது பற்றியே அவனைத் தைவ ஸம்பத்து வாய்ந்தவனுக அறுதியிட்டருளினன் கண்ணபிரான். நமக்கு ஆஸ்திக்ய முள்ளதா? நாஸ்திக்ய முள்ளதா என்பது உலகில் அவரவர்களுடைய நெஞ்சுக்குத் தெரியுமன்றே. ஆஸ்திக்ய முண்டாகில் நம்முடைய பிறப்பு தெய்வப் பிறப்பு என்று தானே நிச்சயித்துக்கொள்ளலாம். அஃதில்லையாகில் அசுரப் பிறப்பே நமக்கு வாய்த்ததென்று நிச்சயித்துக் கொள்ள என்ன தடை? இத் தீய பிறப்பின் தன்மைகளை மேலே பல ச்லோகங்களினுல் கண்ணபிரான் தானே நன்கெடுத்துக் கூறுகின்றுன்— *நசௌசம் நாபி சாசாரோ நஸத்யம் தேஷுவித்யதே, அஸத்ய மப்ரதிஷ்டம் தே ஜகதாஹுரநீச்வரம்* இத்யாதிகள் காண்க. —(தொடரும்)

---

## திருத்தணிகை ஆற்றுப்படை—74-ஆம் பக்கத் தொடர்ச்சி

**உவமைகள் :**

அணிகளுள் சிறந்தது உவமை அணியே. அதுவே பல அணிகள் தோன்றுவதற்கும் அடிப்படை. அதனுற்றுன் தொல்காப்பியர் அதற்கென்றே உவமையியலைத் தமது தொல்காப்பியத்துள் அமைத்தார். இந்நூலாசிரியர் உவமைகளைக் கையாளுவதில் சமர்த்தர் என்பதற்குச் சில சான்றுகள் காட்டலாம்:

(1) பொதுமாதர் கூட்டுறவால் நோயுற்ற மனிதன் தன் நோய் நீங்கிட மருத்துவம், மந்திரம், தந்திரம் ஆகியவற்றில் முந்தையோர் ஈட்டிய செல்வத்தைச் செலவழித்தான். அந்நிலையில் அச்செல்வம் **பொய்யொழுக்கம் உடையவரது புகழ் தேய்வது போலத் தேய்ந்தது.**

"பொய்மை யாளர் புகழெனத் தேய" (வரி 27) என ஆசிரியர் குறித்துள்ளது எவ்வளவு பொருத்தமானது!

(2) நோயாளன் பலரோடும் சென்று முருகப் பெருமானைத் தரிசித்தவுடன்—**நரகத்துள் உழன்றவர் நல்வினைப் பயனுல் நரகத்திலிருந்து நீங்கி இன்புற்றுற்போல**—தனது நோயினின்று முற்றிலும் நீங்கி இன்பநிலையை எய்தினுன் (258 - 261).

(3) நினைத்தவாறு செல்வச்சிறப்பினை நல்கும் கற்பக மரத்தை உடைய இந்திரனது பொன்னகரத்தின் வறுமையை எண்ணி நகைத்தாற்போல—மூங்கிலிலிருந்து வெளிப்படும் முத்துக்களும் யானையின் கொம்புகளிலிருந்து வெளிப்படும் முத்துக்களும் ஆகிய பற்களை வெளிப்படுத்தித் திருத்தணிகை என்னும் மங்கை தனது செல்வ வளத்தைக் காட்டுதல் போலத் திருத்தணிகை வளம் விளங்குகிறது என ஆசிரியர் கூறுவது சுவை பயப்பதாகும் (386 - 390).

**பிற செய்திகள்**

நோயாளி - மருந்து - நோயை நீக்க முயன்ற மருத்துவர் பற்றிய செய்திகள் (123 - 130), பாலையின் கொடுமை (150 - 155), சித்தாந்தக் கருத்துக்கள் (239 - 251), நடனக்கலை (330 - 333) என்னும் பகுதிகள் படித்துச் சுவைக்கத்தக்கவை. குறிஞ்சிப்பாட்டில் காணப்படும் பல மரங்களின் பெயர்களை ஆசிரியர் இந்நூலில் அழகுற அமைத்துள்ளார் (361 -380). இப்பகுதிகள் அனைத்தும் ஆசிரியரது சங்கநூற்புலமையையும் சிறந்த தமிழ்ப்புலமையையும் நன்கு தெரிவிப்பனவாகும்.*

# ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரை

திரு. K. பட்சிராஜன். B.A., B.L., திருநெல்வேலி

(முன் இதழ்த் தொடர்ச்சி)

அவ்வளவிலே உடையவர் முன்னொரு கால் அனுப்பிய ஸ்ரீ வைஷ்ணவர் பக்கல் அபசாரப் பட்டு இதன் காரணமாக உடையவரால் இன்னும் மமகாரம் கழியப் பெற்றிலர் என்று கண்டிக்கப் பெற்று உடையவரால் ஸ்ரீ வைஷ்ணவர் திருப்பரியட்டம் திருத்தும் கைங்கர்யம் நியமிக்கப்பட்டு, அதை மேற்கொண்டு "ஸ்ரீ வைஷ்ணவ வண்ணத்தான்" என்று பெயர் பெற்ற **எச்சான்** என்பவர் உடையவர் திருவடிகளிலே தண்டனிட்டுத் தம் மில்லத்திலே உடையவர் எழுந்தருளி அமுது செய்ய வேணுமென்று பிரார்த்தித்தார். எம்பெருமானரும் அவர் திருந்தியபடி கண்டு உவந்து அவர் வீட்டிலே தாமும் தம் கோஷ்டியும் திருவமுது செய்து எச்சானுக்குப் "போனகம் செய்த சேடம்" பிரஸாதித்து அங்கே ஓரிரவு தங்கினர்.

மறுநாள் காலை பயணமாய்த் திருமுட்டம் (ஸ்ரீ முஷ்ணம்) என்னும் தலம் சென்று உடையவர் ஆதிவராகரைச் சேவித்துப் பின்னர் திருவாலித் திருநகரிக்கு எழுந்தருளினர்.

இவர்கள் கோஷ்டி அவ்வூர் சேர்ந்த பொழுது அங்கே இவர்கள் போக வேண்டிய தெருவின் கோடியிலே (அக்காலத்தே தீண்டத்தகாதவர் என்ற இனத்தைச் சேர்ந்த) ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். உடையவர் கோஷ்டியின் முன்னணியில் வந்த முதலிகளில் சிலர், அம்மாதை விளித்து "எட்டவிலகம்மா" என்று கூறினர். அப்பெண்ணும் முறுவலித்த முகத்தோடு "நாயன்தே! பெரியோர்களே! ஒரு பால் அன்னலம் பூங்கழனி; ஒரு பால் வயலாலி மணவாளன் திருக்கோயில்; ஒருபால் தேவரீர்கள்; ஒருபால் தோரண நெடு வீதியும் நீணிலாமுற்றமும்; இங்ஙனம் நாற்புறமுமானல் அடியேன் எங்கே விலகுவேன்?" என்று வினவினள். அவள் கூறியவற்றை எல்லாம் கேட்டுக் கொண்டே வந்த எம்பெருமானர் "ஆழ்வார் ஸ்ரீ சூக்திப்படியே பேசுமிவள் யார்?" என்று கிட்டிவந்து அவளை அன்புடன் வினவ, அவளும் தனக்குத் திருமங்கை மன்னனிடம் உள்ள பக்தியை வெளியிட, உடையவரும் "பகவத் பாகவத பக்திக்கு அதிகாரி நியமமில்லை என்னுமிடம் கண்டீர்களோ?" என்று முதலிகளுக்குக் காட்டி அப்பள்ளப் பெண்ணைத் தன் அருளொழுகு கண்களால் குளிரக் கடாக்ஷித்து அவளுக்கருள் செய்து திருநகரி புக்கார்.

புக்க எம்பெருமானர் வயலாலி மணவாளனைச் சேவித்து ஆழ்வார் ஸந்நிதிக்கு எழுந்தருளி ஆழ்வாருக்குத் தெண்டன் சமர்ப்பித்து நின்று அணைத்த வேலும், தொழுதகையும், அழுந்திய திரு

நாமமும், ஓம் என்ற வாயும், உயர்ந்த மூக்கும், குளிர்ந்தமுகமும், பரந்தவிழியும், இருண்டகுழலும், சுருண்டவளையமும், வடிந்தகாதும். அலர்ந்த கதுப்பும், தாழ்ந்த செவியும், சரிந்த கழுத்தும், அகன்றமார்பும், திரண்டதோளும், நெளிந்த முதுகும், குவிந்த இடையும், அல்லிக்கயிறும், அழுந்திய சீராவும், தூக்கிய கருங்கோவையும், தொங்கலும் தனிமாலையும் சாத்தின திருத்தண்டையும், சதிரான வீரக்கழலும், குந்தியிட்ட கணைக்காலும், குளிரவைத்த திருவடி மலரும் கொண்டு ஸேவை ஸாதிக்கும் நீலக்கலிகன்றி-மருவலர்தம் உடல்துணிய வாள்வீசும் பரகாலன்-மங்கை மன்னனது திவ்விய விக்கிரக சோபையை அநுஸந்தித்துக்கொண்டே யிருந்தார். ஆழ்வாரும் எம்பெருமானுர் பக்கல் கிருபை பண்ணி யருளி அவருக்குத் தீர்த்தப்ரஸாதமும் திருமாலைப்ரஸாதமும் திருவடி நிலைகளும் ப்ரஸாதித்து விடைகொடுத்தருளினுர். உடையவரும் அங்கு நின்றும் போந்து திருவரசு (பள்ளி படுத்த விடம்) சென்று தெண்டன் ஸமர்ப்பித்து,

**' இதுவோ திருவரசு ஈதோ**
**மணங்கொல்லை**
**இதுவோ எழிலாலி என்ப—திது**
**வோ தான் ?**
**வெட்டும் கலியன் விரைந்துநெடு**
**மாலை எழுத்**
**தெட்டும் பறித்த இடம்,''**

என்று வியந்து போற்றினுர்.

பின்னர் அங்கு நின்றும் புறப்பட்டுத் திருவிந்தளூர் எழுந்தருளி '' அடியோமுக்கே எம்பெருமா னல்லீரே நீர் இந்தளூரீரே ? '' என்றபடி பத்துடையடிவர்க்கெளியனுய மருவினிய மைந்தனை வணங்கி, அழுந்தூர் சென்று ஆமருவி நிரைமேய்த்த அமரர் கோமானை ஸேவித்து, திருவிண்ணகரம்மருவி நாளும் நின்றுனைத் தொழுது, பின்னர் குடமூக்கிலே வெள்ளமிட்டோடும் மதுரகுண வடிவனுய் அதுக்கு மேலே ஏரார் கோலம் திகழக்கிடந்த ஆராவமுதாழ்வாரையும், செல்வம் மல்கியவன் கிடந்த தென் திருக்குடந்தை ஸ்ரீயையும் திருவடி தொழுது, திருக்குடந்தையில் சிலகாலம் தங்கினுர். பிறகு மீண்டும் தம் யாத்திரையைத் துடங்கித் திருப்பேர் நகர் சென்று '' வண்டுகளிக்கும் பொழில்சூழ் திருப்பே ரானைக் கண்டுகளித்துக் கண்ணுள் நின்றகலாதே கருத்தின்கட்பெரியனுய் '' அவர் மனத்தே செறிந்த பேரானைத் தம்மனத்தே தேக்கியவராய் உடையவர் திருவரங்கத்தை அணுகினுர். அவர் எழுந்தருளுவதை அறிந்த கோயில் முதலிகள் அனைவரும் உடையவரையும் அவர் கோஷ்டியையும் மன எழுச்சியோடு வரவேற்றுக் கோலாகலத்துடன் அவரைப் பவனியாக எழுந்தருளப்பண்ண உடையவரும் வழியில் சேவித்தாரை யெல்லாம் குளிர்விக்கும் தம் திருக்கண் மலர்களால் கடாக்ஷித்தருளி அடைவே தம் மடத்துக் கெழுந்தருளிக் கோவிந்தருக்கும் பிற முதலிகளுக்கும் அர்த்த விசேஷங்கள் ப்ரஸாதித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார்.

தம்முடைய முன்னைய ஆசாரியன் பெரிய திருமலை நம்பிகளது ஆணைப் படியே கோவிந்தப் பெருமாள், தமக்கு இனி எம்பெருமானுர் திருவடிகளே

தஞ்சம் என்று கொண்டார். எப்பொழுதும் எம்பெருமானுர் ஸந்நிதியை விட்டு நீங்காமல் காலமெல்லாம் அவர் திருவடி நிழல்போலிருந்து வரத்தலைப்பட்டார், அதனால் அவருக்கு எம்பெருமானுர் கோஷ்டி அநுபவமும், எம்பெருமானுருடன் சல்லாபமும், அவர் திருவடி கைங்கர்யமுமே எக்காலும் பொழுது போக்காயின. அவரது ஆசார்ய பக்தியும், ஆசார்ய கைங்கர்யமும் அங்குள்ள முதலிகள் அனைவரும் கண்டு வியக்கும்படி இருந்தது. ஒருநாள் எம்பெருமானுர் திருவோலக்கமாக முதலிகளுடன் எழுந்தருளியிருந்தார். அங்கிருந்த முதலிகள் அனைவரும் ஒரு மிடருகக் கோவிந்தப் பெருமாளுடைய ஸ்வரூப ரூபகுண விசேஷங்களைப் பாராட்டி எம்பெருமானுரிடம் விண்ணப்பித்தனர். அப்போது எம்பெருமானுர் அருகே நின்றுகொண்டிருந்த கோவிந்தப்பெருமாள் தாமும் தம்மை மெச்சித் தலை குலுக்கியவராய் முதலிகளை நோக்கி "ஒக்கும்! ஒக்கும்" என்று தம்மைத் தாமே ஸம்மதித்து மகிழ்ந்தார். இதனைக் கண்ணுற்ற எம்பெருமானுர் கோவிந்தரை நோக்கி "அவர்கள் உம்மைப் பாராட்டிப் பேசினால் நீர் பணிவோடு தலைவணங்கி நிற்கவேண்டியவர், உம்மையே சிலாகித்துக் கொள்கிறீரே! இது உம்முடைய நிலைமைக்கு அடுக்குமோ? "என்று வினவினர். கோவிந்தரும் எம் பெருமானுரைத் தெண்டனிட்டு" "ஸ்வாமீ! முதலிகள் அடியேனைக் கொண்டாடினால் அது காளஹஸ்தியின் கையில் குடமும் கழுத்தில் கொட்டை வடமுமாய் எளிவரவு பட்டு நித்திய ஸம் ஸாரிகளிலும் கடைப் பட்டுக் கிடந்த இவ் வாத்மாவை அந் நிலையினின்று எடுக்கைக் காகவே' ஒரு திருவவதாரம் எடுத்து அதற்கு வேண்டிய க்ருஷி பரம்பரைகளைச் செய்து போந்த தேவரீருடைய கல்யாண குணங்களுக் கன்றோ சேர்ந்திருக்கிறது! அடியேனுடைய முன் பிருப்பையும் தேவரீர் க்ருபையினாலே வந்த வாழ்வையும் எனக்குள்ளே ஒப்பிட்டுப் பார்த்தேன். யான் எனது என்று வாயால் சொல்லவும் கூசி "நீர் நுமது" என்ற ஆழ்வாரே "நெஞ்சமே! நல்லை நல்லை" என்றும், "எனக்கினி யார் நிகர் நீணிலத்தே!" என்றும் தம்மைக் கொண்டாடிக் கொண்டது போன்று அடியேனும்,

"பற்ப மெனத் திகழ் பைங்கழலும்,
அதன் பல்லவம் போல் விரலும்,

பாவனமாகிய செந்துவ ராடை
பதிந்த மருங்கழகும்,

முப்புரி நூலொடு முன்கையிலே
திகழ் முக் கோல் தன்னழகும்,

முன்னவர் தந்திடு மொழிகள்
நிறைந்தென
முறுவல் நிலாவழகும்,

கற்பகமேய் விழி கருணை பொழிந்
திடு கமல முகத்தழகும்,

காரிசுதன் கழல் சூடிய முடியும்
கனக நல் தாவடமும்,

எப்பொழுதும் எதிராசன் வடிவழ
கென்னிதயத் துளதால்,

இல்லை எனக் கெதிர் இல்லை
எனக் கெதிர்
இல்லை எனக் கெதிரே"

என்று என்னைச் சிலாகித்துக் கொள்ள லாமன்றோ!" என்று பட்டது. புதுக் கோவிந்தன் பழைய கோவிந்தன் நிலையை எண்ணி இப் போதைய இருப்பை மெச்சிக் கொண்ட தித்தனையே என்று விண்ணப் பித்தார். எம் பெருமானாரும் முதலிகளும் அது கேட்டு அவரது ஆத்ம குணங்களை வியந்து பாராட்டினர்.

ஒரு நாள் கோவிந்தர் வெளியே சென்றவர் தன் காலைக் கடன்களையும் மறந்து, ஒரு வீட்டின் வாசலிலே தன்னை மறந்து, நின்று கொண்டிருந்தார். அவ் வழியே போன முதலிகள் இதனைக் கண்டு இவரது இச் செயலுக்குக் காரணம் தெரியாதவர்களாய்த் திகைத்தனர். திகைப்புக்குக் காரணம் அவ் வீடு ஒரு வேசியினுடையது. அவ் வீட்டு முன்பே கோவிந்தர் பரவசராய் நிற்பதைக் கண்ட அவர்கள் வியப்பும் பதற்றமும் அடைந் தது இயல்பே யன்றோ. அம் முதலிகளில் சிலர் தாம் கண்டதை எம் பெருமானாரி டம் விண்ணப் பித்தனர். அவரும் கோவிந்தர் வந்த பின்பு அவரை அழைத்து "கோவிந்தரே! நீர் ஆந் நிகத் தையும் மறந்து ஏதோ ஒரு வீட்டு முன்பு உம்மை மறந்து நின்றிருந்ததாகக் கேட் டோமே!" என்று வினவினர். கோவிந் தரும் "ஸ்வாமீ! அது யார் வீடென் பதை அடியேன் அறிந்திலேன். காலையில் வெளியே போய் வரும்போது ஒரு மதுர மான கானம் கேட்டது. கானத்திலே தேவரீர் திரு நாமம் அடிக்கடி விரவி வரலும் சற்று நின்று கவனித்தேன். உள்ளிருந்து தேவரீர் திரு நாமத்தில் தாலாட்டும், தேவரீர் குணானுபவமும் மதுரமாய், செவிக் கினிய செஞ் சொற் களாய் வந்து அடியேன் செவி நிறைந்த தது. அந்த அநுபவத்திலே அடியேனை மறந்து கால் மேலே செல்லாமையாலே இவ் வளவே." என்று விடையிறுத்தார். உடையவரும் தம் மிடத்தே கோவிந் தருக்கிருந்த ப்ரேமையை வியந்து உள்ளம் உவந்தார். இதறிந்த முதலி களும் கோவிந்தரைப் பாராட்டிப் போற்றினர். உடையவர் திரு மேனியில் கோவிந்தருக்கு ஈடுபாடு பெருகிக் கொண்டே வந்தது. அவர் மெய்யில் பிறங்கிய சீரிலே ஆழங்காற்பட்டு சதா ஸர்வ காலமும் "இராமாநுசன் மிக்க சீலமல்லால் உள்ளாதென் நெஞ்சு" என்ற நிலையை அடைந்தார் கோவிந்தர்.

இங்ஙனம் அவர் எழுந்தருளியிருக்கை யில் ஒரு நாள் அவருடைய திருத்தாயார் அவரிடம் வந்து ஏகாந்தமாக 'அப்பா! கோவிந்தப் பெருமானே! உனது தேவி யார் பக்குவமாயினுள். இனிச் செய்ய வேண்டியதைப் பற்றி உனது கருத்து யாதென்று தெரியவே வந்தேன்" என்று ரைத்தாள். கோவிந்தர் சற்றும் மன எழுச்சியோ, சலனமோ இன்றித் தாயை நோக்கி "ஆகில் என்ன ப்ரமாதம் அம்மா! இருட்டும் தனியுமாயிருக்கிற அவகாசம் பார்த்து நீர் அவளை நம்மிடம் அழைத்து வந்தால் போயிற்று" என்று சாவதானமாகப் பதிலிறுத்தார். தன் மகன் தன்மை யறிந்த தாயாரும் அநேக நாளளவும் தங்கியும் அப்படிப் பட்ட அவகாசத்தைக் கண்டிலள். இனி என் செய்வது என்று எண்ணமிட்ட அவ் வம்மையார், கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தவளாய் எம் பெருமானாரிடம் நேரே சென்று ஏகாந்தத்தில் யாவற்றையும் விண்ணப்பம் செய்தாள். எம் பெரு

மாருரும் கோவிந்தரை அழைத்து, 'கோவிந்தப் பெருமானே! நம் மாணீ! ஒரு ருது காலத்தில் நீர் உம்முடைய வீட்டிற்குப் போய் வரத்தான் வேண்டும்'' என்று நியமித்தார். கோவிந்தரும் ஆசார்யன் கட்டளையை ஏற்று ஒரு நாள் வீடு சென்ருர். இரவு முற்றும் தம் தேவியாருக்கு இறைவனது அந்தர் யாமித்து வத்தை (மறைந்து பரந்ததன்மயை) விவரித்து, அதன் பெருமைகளைப் புகழ்ந்து பாராட்டி அதற்குள் விடியற் காலமாகி விடவே அவளைப் போக விட்டார். வந்த மருகியிடம் நிகழ்ந்த வற்றை ஒருவாறறிந்த கோவிந்தரது தாயார் அவரிடம் ''அப்பா! என்ன பிள்ளையடா நீ! இப்படியா நடந்து கொள்வது. வாழ்வு என்பது உலக இயல்போடு ஒட்டியிருக்க வேண்டாமா?'' என்று குறைப்படவும், கோவிந்தரும் ''நான் என்னம்மா செய்வது. அகவாயில் அந்தர்யாமீ ப்ரகாசித்துக் கொண்டிருக்க அழிச்சாட்டம் கூடுமா! எனக்கு அதற்குரிய அவகாசம் கிடைத்தால்தானே?'' என்று பதில் கூறினர். இவற்றையெல்லாம் அறிந்த சில முதலிகள் நிகழ்ந்தவற்றையெல்லாம் எம்பெருமானுர்க் கறிவித்தனர். கோவிந்தர் வந்ததும் எம்பெருமானுர் புன்முறுவலோடு அவரை விளித்து ''என்ன கோவிந்தரே அகம் போய் வந்தீரோ?'' என்று கேட்டார். கோவிந்தரும் ''ஸ்வாமி! அந்தர்யாமி ப்ரகாசித்துக்கொண்டிருந்ததாலே அந்த விஷயத்துக்கு ஏகாந்தம் கண்டிலேன்'' என்று விண்ணப்பித்தார். எம்பெருமானுரும் கோவிந்தரின் தாயாரை வரவழைத்து, 'கோவிந்தப் பெருமாள் இருப்பை அறிந்து கொண்டீரா?'' என்று கேட்க அவளும் ''எல்லாம் அறிந்தேன். இனி நான் என்ன செய்வேன்'' என்று அங்கலாய்த்தாள். உடையவரும் நாம் செய்யும் விரகொன்றும் இல்லையே! அவர் மனநிலை அப்படியல்லவா உருப்பெற்று உறைந்து விட்டது. அவர் படியை வேருெரு வழியாலும் உமக்குக் காட்டுவோம் என்று கூறி, அவ்வம்மையாரிடம் ஒரு ஊசியைக் கொடுத்து ஒரு இருட்டறையிலே எறிந்து வரச் சொல்ல அவளும் அங்ஙனமே செய்து வந்தாள். பின்னர் உடையவர் சில முதலிகளை அழைத்து அவர்கள் கையில் ஒரு விளக்கையும் கொடுத்து ''முதலிகாள்! இவ்வம்மையார் அதோ அவ்வறையிலே ஒரு ஊசியைக் கைசோர்ந்துவிட்டு வருந்துகிருள். ஆகையால் நீங்கள் போய்த்தேடி எடுத்து வந்து அவ்வம்மையாரிடம் கொடுங்கள்'' என்று நியமித்தார். முதலிகளும் விளக்குடன் போய் ஒரு முகூர்த்த காலம் அவ்வறை முற்றும் துழவி நோக்கியும் ஊசி தென்படாமையாலே வெளி வந்து ஒரு திருவலகு கொண்டுபோய் அறையைத் தூற்றுக்கூட்டிக் கொணர்ந்து சோதித்தெடுப்பதாகத் திட்டமிட்டனர். உடனே எம்பெருமானுர் அவர்களை அழைத்துத் தம்மருகே இருத்திக் கொண்டு பின்பு கோவிந்தப் பெருமாளை அழைத்துவரச் சொன்னுர். கோவிந்தரும் வந்து எம்பெருமானுரை வணங்கி அவர் நியமனத்தை எதிர்பார்த்துச் செவி சாய்த்து நின்ருர். உடையவர் அவரை நோக்கி ''கோவிந்தரே! நீர் அந்த இருட்டறையுள் சென்று அங்கே ஏதேனும் நூதனப் பொருள் கிடைக்கிறதா? என்று பார்த்து வாரும்'' என்று அவரை விளக்குக் கொடாதே அனுப்பினர்.

கோவிந்தரும் மறுவார்த்தையின்றிச் சற்றும் மனக்கலக்கமின்றி நேரே இருட்டறையுள்புக்கு மறுகணமே கையில் ஒரு ஊசியைக்கொண்டு வந்து எம்பெருமானார் திருவடிப்புறத்திலே வைத்து "இது தவிரப்புதிய பொருளொன்றையும் அங்கே கண்டிலேன் ஸ்வாமி! என்று விண்ணப்பித்தார். எம்பெருமானாரும் கோவிந்தரின் தேவியாரைப் பார்த்துக் "கண்டீர்களா நம் கண்ணழகன் படியை!" என்று காட்டிப்பின் தாயான அவ்வம்மையாரை நோக்கி "நாரணன் தம் அன்னை நரகம்புகாள்" என்கிறபடி நீர் ஒன்றும் சோகிக்க வேண்டியதில்லை அம்மா! என்ன நோன்பு நோற்றாய் கொல் இவனைப் பெற்ற வயிறுடைய நீ" என்று அவளை சிலாகித்துக் கொண்டாட அவ்வம்மையாரும் தன் மகனைச் சான்றோன் எனச் சான்றோர் தலைவர் கூறக் கேட்டு ஈன்ற பொழுதிற் பெரிதுவந்து நின்றாள். உடையவரும் கோவிந்தரின் தேவியாரை பரிபூர்ணமாகக் கடாக்ஷித்து அவளுக்கு ஸ்ரீ பாத தீர்த்த ப்ரஸாதங்களை ப்ரஸாதிக்க அவளும் திவ்ய ஞானம் பிறக்கப் பெற்றவளாய் எம்பெருமானார் திருவடிகளிலே தெண்டன் ஸமர்ப்பித்து "அடியேன் சன்யஸித்துக் கொள்ளத் திருவுள்ளமாக வேணும்" என்று பிரார்த்தித்தாள். உடையவரும் அப்படியே அனுமதித்து அவளுக்குக் காஷாயம் ப்ரஸாதிக்க அவளும் துவராடையுடுத்து எம்பெருமானாரால் சிறியாண்டாள் என்ற தாஸ்ய நாமம் அருளப்பெற்று மடத்து அம்மையார்களிலே ஒருத்தியாகவே இருந்து விட்டாள்.

பின்னர் எம்பெருமானார் கோவிந்தரை அழைத்து உமக்கு விஷயாந்தரங்களிலே வெறுப்புத்தோன்றி விட்டது. ஆகவே நீர் இல்வாழ்வானுவதற்கில்லை. "அநாஸ்ரமீ நஸந்திஷ்டேத்" (ஆச்ரமம் யாது மற்றவனுக்கு நல்வாழ்வில்லை) என்ற உண்மை நீர் அறியாததல்லவே. பின் சன்யாசம் செய்துகொள்ள வழி தேடாதிருப்பதென்? என்று வினவினார். கோவிந்தரும் "ஸ்வாமி! அது செய்யக்கடவரும் தேவரீரேயன்றோ? என் தன் முயற்சியைத் தவிர்ந்திருந்தேனித்தனையே. இனி அருள் சுரந்து தேவரீர் ப்ரஸாதித்தால் நன்மையே" என்று விநயத்தோடு விண்ணப்பித்தார். உடையவரும் அகமகிழ்ந்து அவருக்கு முக்கோல் துவராடை முதலியவற்றை அளித்துத் தம்முடைய திருநாமத்தையே அவருக்கு தாஸ்ய நாமமாகச் சாற்றியருள கோவிந்தரும் முகவாட்டத்தோடு நின்றார், எம்பெருமானார் "ஏன் இந்த வாட்டம்" என்று கேட்டலும் கோவிந்தர் "ஸ்வாமி! தேவரீர் நிழலும் அடிதாறுமே பேறென்றிருக்கும் அடியேனுக்குத் தேவரீர் திருநாமத்தையே சாற்றினால் தாங்கவல்லேனோ!" என்று விண்ணப்பித்து அவர் திருவடிகளிலே தெண்டனிட்டுக்கிடக்க, உடையவரும் 'அப்படியா! உமது உளம் நோவுபடாமே செய்வோம், என்று தம் திருநாமத்தின் முதலும் கடையுமான வார்த்தைகளையிணைத்து "எம்பார்" என்று திருநாமம் சாற்றி அவரை முடிபிடித்தெடுத்தருளினார்.

—(தொடரும்)

# பறவைகள் செய்த பாக்கியம்

திரு. என். எஸ். தாத்தாச்சாரியார் – தஞ்சை

*"பிறவாது பேறு பெறுதற்கு எஞ்ஞான்றும்*
*மறவாது இறைஞ்சு என்மனனே — துறவாளன்*
*வண்குருகூர் வாவி வழுதிவள நாடுடைய*
*தண்குருகூர் நம்திருத் தாள்"*

("தன்னால் வரும் நன்மை விலைப்பால் போலே: ஈசுவரனால் வரும் நன்மை முலைப்பால் போலே" — ஸ்ரீரகஸ்யத்ரயஸாரத்தில் கண்டபிள்ளான் திருவாக்கு.

மறையிலும் நிறைந்த திருவாக்கு (1)

அடியார்களுக்குக் கொள்ள மாளா இன்பவெள்ளமாய், நீராய் அலைந்து கரைய உருக்கும் படியாய் எங்ஙனே பேசினும் இன்பம் பயக்கவல்லதாய் இருக்கும் காரொளி வண்ணன் வடிவழகிலும், அள்ளமாளாத் தனிக்குணங்களாய், "கடியன் கொடியன் நெடுமால் உலகம் கொண்ட அடியன்" எனத் திட்டிப் பேசுவதுபோல் பேசினாலும் கட்டி அணைக்குதே அவன் குணங்கள் என்னும்படியாய் இருக்கும் புருஷோத்தமனுடைய கல்யாண குணங்களிலும் ஆழம் கால் பட்டுப் பிச்சேறிப் பாசுரங்கள் ஆயிரத்திற்குமேல் மாயனே மயங்கும்படியாய் (திருவாய்மொழி) இட்டார் நம்மாழ்வார். அவர் திருவடிவழிவந்த ஆன்ற பேரறிவின் எல்லை நிலமான ஸ்ரீ வேதாந்த தேசிகர், அந்த ஆழ்வார் புகழை 'ஒருசாண் மரத்திலே ஓராயிரம் துளை போட்ட வித்தகன்' என்று பேசும்படியாய் இரவின் ஒரு யாமத்தில் இயற்றிய பாதுகா ஸஹஸ்ரம் என்னும் நூலில் ஆழ்வாரையும் பேச வைக்கும்படியாய் அவரைப் பற்றி ஆயிரத்தெட்டு சுலோகங்கள் செய்தார். அந்த நூல் முழுவதுமே நம்மாழ்வார் பெருமையை உணர்த்தும் நூல். அதில் நாதபத்ததியில் "ச்ருதிபி:' பரமம் பதம் முராரே: அநிதம் காரம் அநேவம் இத்யுபாத்தம்! இதம் இத் தமிதி ப்ரவீஷி நூநம்' என்ற செய்யுள் வருகிறது. அதன் கருத்தாவது "தேடியலைந்த வேதங்கள் பரமனுடைய திருவடிகளைப் பற்றி இவை, இத்தகையன எனக்கூற முடியாமல் இருக்க ஆழ்வார் நாதமானது இவை, இத்தகையன என விண்டு காட்டி நம்மை மண்ட வைக்கிறது" என்பது. ஆதலால் ஆழ்வாருடைய திருமுகப் பாசுரங்களே தெளியாத மறை நிலங்களைத் தெளிய வைக்கின்றன என்கிறார் ஸ்ரீ தேசிகன்.

மற்றோர் இடத்தில் ஆழ்வார்கள் பெருமையை வாய் குளிரப் பேசும் அதே மகான், 'இவ்வர்த்தத்தை சித்தரஞ்சனத்தோடே ஸர்வரையும் எளிதாகத் தெளிவிக்கும் அவற்றின், "தொண்டர்க்கு அமுது உண்ணலாய் பொய்யில் பாடலான ஆழ்வார்கள் அருளிச் செயல்கள்" எனப் பொதுவாகப் பேசி, நம்மாழ்வார் பெருமையிலே படியவைக்கிறார். ஸ்ரீ பாகவதத்தில் 4வது ஸ்கந்தத்தில் புரஞ்சனோபாக்கியானத்திலும், மற்றும் 'கலௌ தேவ: பராங்குச:' (கலியுகத்தில் திருமால் நம்மாழ்வாராகத் தோன்றினார்) என்ற தம்பிரான்படி உரையிலும், மேலும் "இனி இவருடைய அவதாரம் தான் ஸர்வேச்சுவரனுடைய அவதாரத்தோபாதி ஸாதுக்களுடைய ஸூக்திபலன்" என்று 'முனியே நான் முகனே' என்ற பாசுர முகப்பின் ஈட்டிலும், இவரை நேரிடையான பகவானுடைய அவதாரமாகவே பேசுகிறார்கள். 'தம்மைக் கொண்டே தம்மைத் தாமே பாடிக்கொள்ளுகிறான் தாமரைக் கண்ணன்' என்று பல இடங்களில் தெரி

விக்கும் ஆழ்வார் 'தானே அவன்' என்பதையும் மணியில் கண்ட ஒளிபோல் காட்டுகிறார்.

இவருக்கு இறைவனிடம் ஏற்படும் காதல் ஒரு புறம் இருக்க, அந்த அமுத வண்ணனுக்கு இவர்பால் ஏற்படும் காதலோ கரை காணுததாக இருக்கிறது. தன்னைக் காட்டிக் காட்டி ஆழ்வார் முன் அவன் மறைப்பதையும், ஆழ்வார் அவனைக் கண்டதும், அடைவதும், அகலுவதுமாகத் திகைப்பதையும் பாசுரங்களின் அழகிய கருத்துக்களிலே நைந்து நின்று பார்த்தால் அப்பாசுரங்களைப் படிப்போர் உள்ளத்தைப் பரவசப்படுத்தியே தீரும். "அஞ்சிறைய மடநாராய்" பதிகத்தில் ஆழ்வார் ஆழிவண்ணனைக் காணத் தவிக்கிறார். உடனே அந்த மாயனும் ஆழ்வார் அருகே "தான் ஒட்டிவந்து என் தனி நெஞ்சை வஞ்சித்து ஊன் ஒட்டிநின்று என் உயிரில் கலந்து" என்னும் படிக்கு ஆழ்வாருடன் ஒட்டுகிறார். ஆழ்வாரும் "விடுவேனே என் விளக்கை, என் ஆவியை" என்று கூறிக்கொண்டே, பகலும் இரவும் அவருடன் குடைந்து அனுபவிக்கிறார். ஆழ்வாரின் காதல் மகா நதியின் பிரவாகம் போலே இருக்கும். ஓரிடத்தில் மயங்கி நிற்கும், மற்றோர் இடத்தில் தாவிப் பெருகும், பிறிதோர் இடத்தில் கரையை இடித்து நுரையுடன் பாயும். ஆழ்வாரின் காதல் வழியினைக் கண்ணனும் அறியான். தெய்வக் காதல் புரிவதில் தாமே வல்லவர் என்பதை "ஆராத காதல் குருகூர்ச் சடகோபன்" என்ற தம் பாசுரத்தாலே தாமே வெளியிடுகிறார். இப்பாசுர ஈட்டில் காணும் பொருள் நயம் மிக அழகாக அமைந்துள்ளது. "காதலையிட்டாயிற்று இவரை நிருபிப்பது"; "இக்காதலோடே ஆயிற்று ஆயிரம் அருளிச் செய்தது" என்று பல முறைகளிலும் ஆழ்வாரின் காதலை வியந்து பேசுகிறது ஈடு. அடியார்களுக்கு எளியவனை எம்பெருமானிடம் ஆழ்வாருக்குக் காதல். காதல் நிலையில் ஏற்பட்ட சலுகைதான் என்னே! உறவுதான் ஆகா! ஊடல்தான் அந்தோ! பிரிவுதான் எல்லே! "மன்னிடை வடிவார்" பதிகத்தில் "வன்மமே சொல்லி எம்மை நீ விளையாடுதி அது கேட்கில் என்னைமார் தன்ம பாவம் என்னுர் ஒரு நான்று தடி பிணக்கே" என்ற பாசுரப் பகுதியில் ஆழ்வார் பேசும் உரிமையைப் பார்க்க வேண்டும். கண்ணு! நாங்கள் பாவையை வைத்து விளையாடுகிறோம்! நீதான் எங்களை மறந்தனையே! துறந்தனையே! நாங்கள் எங்கள் வாக்கில் விளையாடுகிறோம். இங்கு உனக்கு என்ன செயல்! ஏதோ நெருங்கிக் காதில் சுகு, சுகு எனப் பேசுகிருய், விளையாடுகிருய். எங்கள் உடன் பிறந்தவர்களான ஆண் பிள்ளைகள், நீ பெண்கள் விளையாடும் தனி இடத்தில் வந்து செய்யும் அட்டூழியங்களைக் கேட்பார்கள் ஆகில், என்றைக்காவது அவர்கள் தடியும் கையுமாக உன்னுடன் போர்புரிவார்கள். இதை நீ சிந்தையில் கொள்" என்பது இந்த அடியின் பொருள். இதுவல்லவோ அனுபவ வெள்ளம்! புக்தியின் பெருக்கு!! இப்பதிகமே படிப்போர்க்குத் தேன் பாகுமாம்.

ஆசார்ய இருதய சூர்ணையில் "பர பரம பக்திகளிலே பேதை முதலான பருவங்கொள்ளும்" என்ற இடத்தில் மாமுனிகளின் உரை மிக அருமை. அதாவது ஆழ்வார் தலைமகள் தன்மையில் பேசும்பொழுது பெண்களுக்குக் கூறப்பட்ட பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேர் இளம்பெண், என்கிற ஏழு பருவ நிலைகளிலும் இக்காதல் பல வகையில் இலக்கணப் படிக்குப் பரிமளிக்கிறது என்கிறார். மங்கையருக்கு ஏழு பருவங்களில் ஏற்படும் உள் உணர்ச்சியை ஆழ்வார்கள் பாக்களிலே பொருத்தி விரிவாக அங்குக் கூறியிருக்கிறார். இவ்வாறு மாபெரும் அறிவாளிகளான ஆசார்ய சக்ரவர்த்திகளின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட ஆழ்வார் தூது விடும் இடத்தில் மூன்றும் பாட்டான "விதியினால் பெடை மணக்கும்" (1-4. 3) என்னும் பாசுரத்தின் விளக்க உரையில் சென்ற இதழில் "உலகிரந்த" என்ற சொல் வரை விளக்கம் கூறினேம். அப்பாசுர அடியில் "கள்வர்க்கு" என்ற சொல் வருகிறது. கள்வன் என்பது பகவான் கண்ணனுக்கு ஆழ்வார் இடும் அருமையான உயர்ந்த பெயராகும். நம் பாபங்களை எல்லாம் நம்மை அறியாமலேயே கவர்ந்து விடுகிறானும். கள்ளம் என்றால் வாழைப்பூ இதழில் பூக்களின் இடையே கள்ளன் போல், ஒளிந்திருப்பதாகும். கண்ணனும் மனிதர்களின் இடையிலே மனிதர்கள் போல் கலந்து, தன்னு



மன்மதன்

தென்காசிக் கோயிற் சிற்பம்

டைய உண்மை நிலையை மறைத்துக்கொண்டு கள்ளம் காட்டுகிறுன். அதனுல் அவனைக் கள்வன் என்றும் ஆழ்வார் கூறுகிருரோ என்னலாம். திருமாலை ஆண்டான் என்னும் ஆசாரியர் பகவான் மாவலியின் வேள்விச் சாலைக்குத் தன் மார்பகத்து லட்சுமியை மான் தோலினுல் மறைத்துச் சென்று தன் சிறு அடியைக் காட்டிப் பெரிய அடியால் உலகத்தை அளந்த வஞ்சனைக் கள்வன் என்கிருர் ஆழ்வார் என்பாராம். ஆழ்வார்கள் யாவருக்குமே வாமனுவதாரத்தில் மிகுந்த ஈடுபாடு உண்டு. அந்த அவதாரத்தில் ஏழை, எளியவன் என்று பாராமல் எக்காலத்தில் உள்ளோரும் தன் திருவடி சம்பந்தத்தை ஏற்படுத்தினுன் அன்ருே ! இன்னும் இச் செய்யுளில் உள்ள ஒவ்வொரு அடிக்கும் உரை சிங்கநடையாய்க் கம்பீரமாகச் செல்கிறது. அவை எல்லாவற்றையும் எழுதக் கட்டுரை மிக நீளமாகும். ஆகவே அடுத்த செய்யுளின் இன்பம் நுகருவாம்.

**"என் நீர்மை கண்டு இரங்கி இது தகாதென்னுத,**
**என் நீல முகில் வண்ணர் (க்)கு என் சொல்லி யான் சொல்லுகேனே !**
**நன்னீர்மை இனி அவர்கண் தங்காது என்றுஒரு வாய்(ச்) சொல்**
**நன் நீல மகன்றில்காள் நல் குதி ரோ ? நல்கீரோ ?"**

இப்பாட்டு இப்பதிகத்தில் நான்காவது பாட்டாகும். இப்பாட்டு புலவர்கள் மிக்வும் ஈடுபட்டுத் திளைக்கும்படியான அருமையான பாட்டாகும். எம்பெருமானை ஆழ்வார் விடவும் முடியாமல் தொடவும் இயலாமல் ஆற்ருமையினுலே அகம் குழைந்து பேசுகிருர் இப்பாட்டில்.

**என்னீர்மை :** என்னுடைய பிரிவாற்ருமையை, **கண்டு :** (உடலில் ஏற்பட்ட மாறுதலை) நோக்கி, **இரங்கி :** இரங்கி இரக்கம் கொண்டு, **இது தகாது என்னுத :** இவ்வாறு பிரிந்து வாடுவது தகுதி இல்லை எனக்கூருத, **என் நீல முகில் வண்ணர்க்கு :** காளமேகம் போன்ற அழகனுக்கு, **என் சொல்லி :** என்ன வார்த்தை சொல்லி, **யான் :** நான், **சொல்லுகேனே :** தெரிவிப்பேனே ! **நல் நீர்மை இனி அவர்கண் தங்காது என்று :** இனிமேல் உமக்கு ஆதரிக்கும்படியாய் அவளுடைய இருப்பு நிற்கமாட்டாது என்று, **ஒரு வாய் சொல் :** ஒரு வார்த்தை சொல்லுதலை, **நல்நீல மகன்றில் காள் :** நல்ல நீல நிறமுடைய மகன்றில் பறவைகளே ! **நல்குதிரோ ? நல்கீரோ ? :** அவனிடம் எடுத்துரைத்து உதவி செய்வீர்களோ, செய்யமாட்டீர்களோ ?

"என் அன்புள்ள மகன்றில் பறவைகளே ! நான் அவரைப் பிரிந்து ஒரு கணமும் தரிக்கமாட்டேன் என்று அறிந்திருந்தும் அறியாதவர் போல் இருக்கும் அவருக்கு நான் என்ன சொல்லி உங்களை அனுப்புவது ? இருப்பினும் மகன்றில் பறவைகளே ! நீங்களாவது அந்த நீலமேகன் அருகில் சென்று 'இனி அவள் தங்களை விட்டுப் பிரிந்து உயிர்தரியாள்' என்ற ஒரு சொல்லைச் சொல்லுவீர்களோ ? மாட்டீர்களோ" என்பது இப்பாட்டின் பொழிப்புரை.

**என் நீர்மை கண்டு இரங்கி :** நீர்மையாவது பட்டுப்போன்ற மிருதுவான தன்மை என்று ஒரு பொருள், அல்லது பிரிவினுல் ஆற்ருது இருக்கும் தன்மை எனவும் பொருள். நீரின் தன்மை ஆழ்வாரிடம் அண்டியது போலும். இராமானுசருடைய சீடராய் எழுந்தருளி இருந்த பட்டர் என்ற ஆசார்யரை, ஓர் தமிழ்ப் புலவர் ஆழ்வார் 'என் நீர்மை கண்டு இரங்கி' என்று கூறினுரே, இது பொருந்தாது. 'கேட்டு இரங்கி' என்றல்லவோ கூறவேண்டும். உடலில் ஏற்படும் வாட்டத்தை அருகில் நேரில் இருந்தால்தானே காண முடியும். எவ்வாறு ஆழ்வான் இளைப்பை அவர் காணமுடியும் என்று கேட்டாராம். அதற்கு ஸ்ரீ பட்டர் பெருமாள் 'தமிழ்தான் கற்றிலீர் போலும். அதன் இன்சுவை காணத் தங்களுக்கு விரகு இல்லையே: 'புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில் அள்ளிக் கொள்வற்றே பசப்பு' என்ற திருக்குறளை அறியீரோ ? நான் முன்பு தலைவனுடன் கலந்திருந்தேன். அப்பொழுதே சிறிது பிரிந்தேன். அவ்வளவில் என்

உடலில் தளர்வும், நிறம் மாறுதலும் ஏற்பட்டு என்னைக் கவர்ந்தது. என்பது இக்குறளின் கருத்து என்று கூறி, குறுந்தொகை என்னும் சங்க நூலில் இருந்து ஒரு செய்யுளை எடுத்துக் காட்டினர்.

'ஊர்உண் கேணி உண்துறைத் தொக்க
பாசி யற்றே பசலை காதலர்
தொடுவுழி(த்) தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழி(ப்) பரத்த லானே"

என்பது அந்தக் குறுந்தொகை நூற் செய்யுள்.

"ஊரின் நடுவே உள்ள பாசி படர்ந்த கேணியில் உள்ள நீர்ப்பாசியானது நீர் பருகும் பொழுது விலகியிருந்தும், கை எடுத்தவுடன் சேர்ந்தும் விடுவது போல், அவர் உடலில் தொட்ட இடமெல்லாம் பிரிவு தாங்க முடியாமல் வெளுத்துப் போயிற்று" எனத் தலைவி கூறுவதாக இப்பாட்டில் கூறப்பட்டது.

'பசலை' என்றால் வைவர்ண்யம் அதாவது நிறம் மாறுதல் எனத் திருவாய்மொழி அரும்பத உரை கூறுகிறது. தலைவனுடன் கூடும்பொழுது நீங்கியும் பிரிந்த காலத்து ஒன்றியும் காண்பது பசலை எனப்பொருள் எனக் குறுந்தொகை உரை கூறுகிறது. இதுவே பட்டருடைய பதிலாகும். கலித்தொகையிலும், இதே கருத்துள்ள "விடுவுழி விடுவுழிச் சென்று ஆங்கு அவர் தொடுவுழி(த்) தொடுவுழி" என்ற அடியும் காணத்தக்கது. வடமொழியிலும் "யாம நயாமி இதி தவே வததி புரஸ்தாத் க்ஷணேந தங்வங்யா: I களிதானி புரோ வலயானி அபராணி ததைவ தளிதானி" என்ற செய்யுளில் பிரிவில் தலைவியினுடைய கையறுநிலை அழகாகப் பேசப்படுகிறது. ஒரு தலைவன் தலைவியின் முன்பு நின்று 'நான் இன்று (பிரிந்து) செல்லுகிறேன். இல்லை செல்லவில்லை' என்று கூறினன். இதைக் கேட்ட தலைவியின் கைகளில் உள்ள அடுக்கு அடுக்காய் அணிந்த வளையல்களில் சில 'செல்லுகிறேன்' என்ற சொல்லைக் கேட்டதுமே, துரும்பாய் உடல் இளைத்துப்போன அத்தலைவியின் கைகளில் இருந்து சில வளையல்கள் நழுவிக் கீழே விழுந்து விட்டனவாம். அடுத்து "செல்லவில்லை" என்ற சொல்லைக் கேட்டதும், மகிழ்ச்சியால் உடல் பருத்துக் கையும் பருக்கவே எஞ்சி இருந்த வளையல்கள் கைகளுக்கு அடங்காமல் தெறித்து விட்டனவாம். இம்மாதிரியான காதல் நிலையைத் தான் ஆழ்வார் தம்மிடம் ஈண்டு எடுத்துக் கூறுகிறார். ஆகவே "இந்நீர்மை கண்டு இரங்கி" என்று ஆழ்வார் பாசுரத்தில் குறிப்பிட்ட சொல் தமிழ் இலக்கிய நயம் அறிந்து ஆளப்பட்ட சொல்லாகும் என அப்புலவரும் உணர்ந்தார்.

ஆழ்வார் மகன்றிலைப் பார்த்ததும், அதன் உடல் நீல நிறமுள்ளதானபடியால், நீல மேகனை திருமால் நினைப்பு வந்துவிட்டது ஆழ்வாருக்கு. ஆகவே நிறம் ஒன்றிய உறவை வைத்துக் கொண்டு அப்பறவையுடன் பேசுகிறார். மகன்றில் என்றால் கிரௌஞ்சப் பறவை எனவும் பொருள், என அரும்பத உரைகாரர் திருவுள்ளம். அப்படியாயின் காதலின் தன்மையும், பிரிவினால் ஏற்படும் தாங்கமுடியாத துயரத்தையும், பறவைகளுக்குள் முற்றும் அறிந்த அப்பறவையிடம் தம் நிலையை ஆழ்வார் எடுத்துக் கூறுவதும் மிகப் பொருந்தும்.

என்நீல முகில் வண்ணர்க்கு: இச்சொல்லை இங்கு ஆழ்வார் கையாண்டதின் நோக்கம் கண்ணனுடைய உடலில் ஏற்பட்ட குளிர்மையும், இனிமையும், மிருதுத் தண்மையும், உள்ளத்திலே இல்லை போலும். இருந்திருந்தால் என்னை இவ்வாறு துடிக்க விட்டிருப்பாரா? என்பதே. அவனைப்பற்றிக் குறை கூறியாவது தன் நிறைவு பெறலாமோ? என ஆழ்வார் திருவுள்ளம் போலும். இந்த அடிக்கு ஈடு கூறும் பொருள் அழகானது: "வடிவைக் காட்டிக் காணும் அநன்யார்ஹமாக்கிற்று (மற்றொருவரையும் சாரமுடியாமல் பண்ணிற்று); இவ்வடிவில் புகர் (குளுமை) அகவாயிலும் (உள்ளத்திலும்) உண்டாகப் பெற்றதில்லை" என. இப்பாசுரத்தில் வந்த மற்றைய சொற்களின் நயத்தை அடுத்த இதழில் அனுபவிப்போம்.

# பழுவேட்டரையர்

திரு. வை. சுந்தரேச வாண்டையார்

(பகுதி—1)

**பழுவூர்** என்பது திருச்சிராப்பள்ளி ஜில்லா உடையார்பாளையம் தாலுகாவில் உள்ளதொரு ஊர். இது **சிறு பழுவூர், பெரும் பழுவூர்** என்னும் இரு பிரிவுகளை உடையது. இவைகளுள் சிறு பழுவூர், திருஞானசம்பந்தப் பெருந்தகையாரால் பாடப்பெற்ற பழமையும் பெருமையும் வாய்ந்தது. இவ்வூர் இக்காலம் 'கீழப்பழுவூர்' என்று வழங்கப்படுகின்றது. **பழு** என்ற சொல்லுக்கு ஆலமரம் என்று பொருள். ஆலமரத்தைத் தலவிருட்சமாக உடைமையால் இவ்வூர் பழுவூர்' என்னும் பெயர் பெற்றது. இவ்வூர் தீர்த்த விசேடம் உடையது ஆதலின், சிறு பழுவூர்த் திருவாலந்**துறை** என்று கூறப்பெறும். **பரசுராமர்** தம் தாயாரைக் கொன்ற பாவம் இக்கோயில் சிவதீர்த்தத்தில் நீராடியதால் நீங்கியது என்பர். அதற்கு ஏற்ப அர்த்த மண்டபத்து வாசல், நிலைக்கல்லின்மேல், கிடந்த கோலத்தில் பரசுராமரின் திருமேனி அமைக்கப்பட்டுள்ளது.

**'அந்தணர்க ளானமலை யாளரவ**
**ரேத்தும்**
**பந்தமலி கின்றபழு வூர்அரனை'**
**'மண்ணின்மிசை யாடிமலை யாளர்**
**தொழு தேத்திப்**
**பண்ணிஜொலி கொண்டுபயில்**
**கின்றபழு வூரே'**

என்னும் இவ்வூர்த் தேவார அடிகளால் மலைநாட்டு அந்தணர்கள் இக்கோயிலில் பூசை செய்துவந்தனர் என்று அறியலாம். இக்காலத்தில் இவ்வழக்கம் இல்லை.

கீழப்பழுவூர்க்கு மேற்கே ஒன்றரை மைல் தூரத்தில் பெரும் பழுவூர் இருக்கின்றது. இதன் பழம் பெயர் **அவனி கந்தர்வ புரம்.** இப் பெரும்பழுவூர் இக்காலம் மேலப் பழுவூர் என்று வழங்கப் பெறுகின்றது. இம் மேலப் பழுவூரில் தான் **பழுவேட்டரையர்** வந்து தங்கியுள்ளனர்.

**பழுவேட்டரையர்** என்ற தொடர் ஆலமரத்தைத் தலவிருட்சமாக உடைய பழுவூர் என்னும் தலத்தை விரும்பிவந்து தங்கியவர் என்று பொருள்படும். இவர்கள் எக்குலத்தைச் சேர்ந்தவர்? எங்கிருந்து வந்தவர்? என்று அறுதியிட்டு உரைத்தற்குச் சான்றுகள் கிடைத்தில. அரிஞ்சயனை மகனாகப் பெற்ற முதற் பராந்தக சோழரது தேவிமார்களில் ஒருவர், **சேர அரசன் பழுவேட்டரையர் மகளார்** என்று, அன்பில் செப்பேடு குறிப்பிடுகின்றது (Ep. Ind., Vol. IX, P. 50). இதுகொண்டு இவர் சேரர் குலத்தினர் என்பர்.

அவனி கந்தர்வ ஈஸ்வர கிருகத்து வடவாய் ஸ்ரீ கோயில், தென்வாய்,

ஸ்ரீ கோயில் இவைகளைக் கட்டியவர் தேவனுர் ஆவர். இத்தேவனுர் பழுவேட்டரையனைச் சேர்ந்தவர். "இந்நாட்டுப் பழூவூர் பகைவிடை ஈஸ்வரத்துத்தேவனுர் மகன் நக்கன்பூதி பழுவேட்டரையன் குமரன் கண்டன் பிரசாதத்திஞல் அருளிச் செய்ய (S.I.I. Texts Vol. XIII The Cholas No. 235) என்னும் கல் வெட்டுப் பகுதியே இதற்குச் சான்ருகும்.

**தேவனுர்** என்பது ஒருவரது இயற் பெயராக இருக்க முடியாது. அவரைக் குறிக்கும் மரியாதை மொழியாக இருக்க வேண்டும் என்பது கல்வெட்டுத்துறை யாளரின் கருத்து. எனினும் தேவனுர் பழுவேட்டரையர் என்பதில் எட்டுணை யும் ஐயமில்லை. **இத்தேவனுர் மகளார் அக்கார நங்கையார், பிள்ளையார் சேர மானுர் தேவியென்றும்,** முதலாம் இராச ராச சோழரது மனைவியார் **பஞ்சவன் மாதேவியார்** இத்தேவனுர் மகளார் என்றும், இந்த அவனி கந்தர்வபுரத்துக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. ஆகையால் இப்பழுவேட்டரையர் சேர, சோழர்களுக்குச் சம்பந்திமார் ஆவர்.

இவைகளினுல் பழுவேட்டரையர் சேரர் குலத்தினர் ஆகார் என்பது ஒரு தலை. மேலும் இவர்கள் சோழ மன்னர் களின் அரசியல் தலைவர்களாயும், போர் வீரர்களாயும் இருந்தனர். இவர்களிடம் படையும் (Army) இருந்தது. இவை களோடு இவர்கள் பெருஞ் சைவப் பற்று உடையவர்களாய், பெரும் பழுவூரிலும் அவனி கந்தர்வ புரத்திலும், கீழப் பழு வூரிலும் பல கற் கோயில்களைக் கட்டி யுள்ளனர். அக் கோயில்களுக்கு நிபந்தங் களையும் அளித்துள்ளனர். இவர்களது படை வீரர்களும் சைவப் பற்று உடைய வர்களாய்த் திகழ்ந்தனர்.

முதற்பராந்தக சோழன் காலத்தில் (கி. பி. 907—955) **வெள்ளூர்** என்னும் இடத்தில் முதற்பராந்தக சோழர்க்கும் பாண்டியர்க்கும் பெரும் போர் நிகழ்ந் தது. அப்போரில் பாண்டியர் முப்படை யுடன், சோழரை எதிர்த்தனர். அப் போரில் சோழர் படையில் இருந்த **பழுவேட்டரையர் கண்டன் அமுதனுர்** பொருது உயிர் துறந்தனர் என்று கீழப் பழுவூர்த் திருவாலந்துறை உடை யார் கோயில் கர்ப்ப இல்லின் மேற்குப் புறச் சுவரில் உள்ள முதற்பராந்தகனது 12 ஆம் ஆண்டுக் கல்வெட்டு உணர்த்து வது இவர்கள் போர் வீரர்களாய்த் திகழ்ந்ததற்குச் சான்ருகும்.

அடிகள் பழுவேட்டரையர் கண்டன் மறவனுர் படை, இளைய இரணமுக ராமனில் இருந்த கைக் கோளன் பல தேவன் வைரியும், குன்றக் கூற்றத்து மல்லூர் இருந்த வெள்ளான் கிழவன் நம்பனும், தங்களில் உருவிக் குத்திக் கொண்டதன் விளைவாய், வைரி இறக்க, கிழவன் நம்பனை, அடிகள் பழுவேட் டரையர் கண்டன் மறவனுர், சிறுபழு வூர்த் திருவாலந்துறை உடைய மகா தேவர்க்கு, வைரியைச் சாத்தி ஒரு நொந்தாவிளக்கு வைக்குமாறு பணித் தமை, பழுவேட்டரையரிடம் படை இருந்தமைக்கு ஆதாரம் ஆகும், அந்தப் படையினர்க்கு **இளைய இரணமுகராமன்** என்னும் பெயர் வைக்கப்பட்டிருந்தது, படை எவ்வளவு திருந்திய முறையில்

அமைக்கப்பட்டிருந்தது என்பதைப் புலப்படுத்தும். கைக்கோளர் என்பதற்கு வீரர் (Warrior) என்பது பொருள்.

## மேலப் பழுவூரில் இவர்கள் எடுப்பித்த கோயில்கள்

மேலப் பழுவூரில், திருத்தோட்டமுடையார் கோயில், பகைவிடை ஈஸ்வரம், அவனிகந்தர்வ ஈஸ்வர கிருகம், இதன் வடவாய் ஸ்ரீ கோயில், தென்வாய் ஸ்ரீ கோயில் என்னும் ஐந்து கோயில்கள் இருந்தன எனக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன, இவைகளுள் அவனி கந்தர்வ ஈஸ்வரகிருகத்துத் தென்வாய் ஸ்ரீ கோயிலும், பகைவிடை ஈஸ்வரமும் இக்காலம் காணப்படவில்லை. அவை இரண்டும் புரப்பார் இன்றி அழிந்து ஒழிந்தனவாகும்.

### 1. திருத்தோட்டமுடையார் கோயில்

இக்கோயில் இக்காலம் சுந்தரேஸ்வரர் கோயில் என்று வழங்கப்படுகிறது. இது ஊர்க்கு மேற்கில் கிழக்கு நோக்கிய சந்நிதியையுடையது. இக்கோயிலில், பரகேசரி வர்மன் உத்தமசோழன், முதலாம் இராச ராசன், முதற் குலோத் துங்க சோழன், திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவன், சடாவர்மன் திரி புவனச் சக்கரவர்த்தி சுந்தரபாண்டியன் இவர்கள் காலங்களில் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

"கோராஜகேஸரி வர்மர்க்கு யாண்டு 4 ஆவது தொட்டு நாள் இருநூற்று நாலினால் குன்றக் கூற்றத்து மன்னும் பெரும்பழுவூர் அடிகள் பழுவேட் டரையன் கண்டன் மறவனேன் எடுப்பித்த ஸ்ரீ கோயில் திருத் தோட்ட முடையார் கோயில் பட்டுடைக் காணி யாவதெல்லாம் நான் மலாட்டுச் சேனு புரத்தே இருக்க இத்தேவர்க்கு ஸ்ரீ காரியம் ஆராய்கின்ற கவுசிகன் நக்கன் மறவனேனுக்கு வந்து சொல்லத் திருச் வளந்தைப் பட்டுடையான் காஸ்ய பகோத்திரத்து இளங்கோ சூர்யனுக்கு இத்தோட்டமுடையார் கோயில் கண் காணியாக தேவலன் சந்திராதிதவல்" ...என்னும் கல்வெட்டு இக்கோயிலைக் கட்டியவன் **பழுவேட்டரையன் கண்டன் மறவன்** என்பதைத் தெரிவிக்கின்றது. இவன் உத்தமசோழன் காலத்திலும், முதலாம் இராசராச சோழன் காலத் திலும் இருந்தவன். முதலாம் இராச ராசன் காலத்தில் இக்கோயிலில் ஸ்ரீ காரியம் செய்து வந்தவன் **கௌசிகன் நக்கன் மாறன்.** (ஸ்ரீ காரியம் - கோயில் மேற்பார்வை). இக்கண்டன் மறவன் மலையமான் நாட்டில் **சேனுபுரத்தில்** சில காலம் தங்கியிருந்த செய்தி இக்கல் வெட்டால் புலப்படுகின்றது. எனவே இவனுக்கு மலையமான் நாட்டில் உற வினரோ அல்லது நண்பினரோ இருந் திருக்கவேண்டும். உத்தம சோழ தேவரின் 16 ஆம் ஆட்சி யாண்டிற்கு முன் இக்கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும். இது, "ஸ்வஸ்தி ஸ்ரீ கோப் பரகேஸரி பன்மர்க்கு யாண்டு உத்தம சோழர்க்கு யாண்டு பதின் ஆறுவது குன்றக் கூற்றத்து மன்னு பெரும்பழுவூர் திருத்தோட்டமுடைய மகாதேவற்கு அடிகள் பழுவேட்டரையர் கண்டன் மறவனார் வைத்த திருநுந்தாவிளக்கு எரிய நிசதம் உழக்கு நெய்க்கு வைத்த ஆடு...." என்னும் இக்கோயில் கல்

வெட்டால் அறியக்கிடக்கின்றது. இத்தகைய கோயில் கண்டன் மறவனால் செங்கல்லால் கட்டப்பட்டிருந்தது.

இக்கோயில் முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் (கி.பி. 1070—1120) இடிந்து போய், திருவாராதனையும் இன்றி, இருந்தது. இதனை அறிந்த வாண கோவரையன் சுத்தமல்லன் உத்தமசோழனை இலங்கேஸ்வரன், சக்கரவர்த்தியாகிய ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர் திருமேனி கல்யாணத் திருமேனியாக, குலோத்துங்க **சோழ ஈஸ்வரமென்று** திருக்கற்றளி எழுந்தருளுவித்து, திருஆராதனைக்குத் தில்லைக் குடியாகிய குலோத்துங்க சோழநல்லூரைத் தேவதான இறையிலியாகக் கொடுத்துள்ளான். இச்செய்தி,

''இந்நாட்டு மன்னும் பெரும் பழுவூர் திருத்தோற்ற முடைய மகாதேவர் கோயில், முன்பு இட்டிகையால் செய்தும், துக்குடலாயும் வந்து, திருவாராதனையுமின்றி இருந்திடத்து, சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர் திருமேனி கல்லியாண திருமேனியாக, ஸ்ரீ குலோத்துங்க ஈஸ்வரமென்று திருக்கற்றளி எழுந்தருளுவித்து திருவாராதனையும்..... செய்வித்தான் உத்தமசோழனை வாணகோவரையன் சுத்தமல்லன் இலங்கேஸ்வரன்'' என்னும் மீனாட்சியம்மன் கோயில் மேற்குப்புறச் சுவரில் உள்ள கல்வெட்டுப் பகுதியால் அறியக் கிடக்கின்றது.

இக்கல்வெட்டு ''புகழ்மாது விளங்க'' என்னும் முதற் குலோத்துங்க சோழனின் மெய்க்கீர்த்தியை யுடையது.

உத்தம சோழன் காலத்தில் 'திருத்தோட்டமுடையார்' என்று இடப்பட்டிருந்த பெயர், முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் 'திருத்தோற்றமுடையார்' என்று திரிந்து வந்துவிட்டது.

மேற்குறித்த கல்வெட்டில் யாண்டு சிதைந்து விட்டது. எனினும் மற்றொரு கல்வெட்டு முதற்குலோத்துங்க சோழனின் முப்பதாம் ஆட்சியாண்டில் கருங்கல்லால் கட்டப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது. எனவே இது பொழுதுள்ள இக்கோயில் கருங்கல்லால் கட்டப்பட்டு இற்றைக்கு 864 ஆண்டுகள் ஆகின்றன.

**பகைவிடை ஈஸ்வரம்**

''ஸ்வஸ்தி ஸ்ரீ கோவிராஜகேஸரி பன்மற்கு யாண்டு 13ஆவது குன்றக் கூற்றத்து அவனிகந்த ஈஸ்வரபுரத்து மகாதேவர்க்கு, இந்நாட்டுப் **பழுவூர்ப் பகைவிடை ஈஸ்வரத்துத் தேவனார் மகன்** பூதி பழுவேட்டரையன் குமரன் கண்டன் பிரசாதத்தினால் அருளிச்செய்ய இத்தனி தேவதானம் ஊரகன்குடி அபோஹனங் கிடந்த பூமியை கல்லி, இரண்டு பூவிலும் விளைய, மசக்கிக் குடுத்த நிலம் எட்டுமா. இப்பூமியில் போந்த போகங்கொண்டு இரண்டு தளியிலும் ஒரோ நொந்தா விளக்கு இரவும் பகலும் எரிக்கக்கடவோம். இத்தளிபட்டுடையோம் எழுவோம்'' என்னும் அகத்தீஸ்வரத்துத் தென்புறச் சுவரில் உள்ள கல்வெட்டு. (S.I. I. Texts Vol. XIII, The Cholas No. 235) பகைவிடை ஈஸ்வரம் என்னும் கோயில் ஒன்று மேலப் பழுவூரில் இருந்த செய்தியைப் புலப்படுத்துகின்றது. இதற்கு ஏற்ப திருத்தோட்டமுடையார்

கர்ப்பஇல்லின் தென்புறச்சுவரில் உள்ள மிகமிகச் சிதைந்துள்ள கல்வெட்டில் "குன்றக் கூற்றத்து மந்து பெரும் பழூர் பகைவிடை ஈஸ்வரத்து.. திருவமுது அரிசி தேவநாழியால்" என்னும் தொடரும் இதை வலியுறுத்தும். ஈண்டுக் குறிக்கப்பட்ட முதல் கல்வெட்டில் "பகைவிடை ஈஸ்வரத்துத் தேவனார் மகன்" —என்பதால் பகைவிடை ஈஸ்வரம் தேவனாரால் கட்டப்பட்டது என்பது அறியக்கிடக்கின்றது. அத் தேவனார் மகன் நக்கன்பூதி பழுவேட்டரையன் குமரன் கண்டன், ஊரகன் குடியில் அபோஹனங்கிடந்த பூமியை (which was lying fallow) க்கல்லி இரண்டு பூவிலும் விளையும் போகத்தைக் கொண்டு பகைவிடை ஈஸ்வரத்திலும், அவனிகந்தர்வ ஈஸ்வரத்து மகாதேவர் கோயிலிலும் ஒவ்வொரு நுந்தாவிளக்கு எரிவதற்கு அருளிச் செய்துள்ளான். இப்பகைவிடை ஈஸ்வரம் அழிந்துபோய் விட்டது.

---

## நவராத்திரி விழா நடைபெற்ற கோயில்கள்

**ஓமாம்புலியூர் :** ஸ்ரீ பிரணவ வியாக்கிரபுரீஸ்வரர் கோயில்

**சென்னை :** இராயப்பேட்டை பிரசந்ந விநாயகர் கோயில்

**மதுரை :** ஸ்ரீ கூடலழகர் கோயில்

**மதுரை :** ஸ்ரீ வீரராகவப் பெருமாள் கோயில்

**சென்னை :** ஆனைகவுனி ஸ்ரீ வைகுண்டப்பெருமாள் கோயில்

**சென்னை :** ஏகாம்பரேசுவரர் கோயில்

**சேலம் :** செவ்வாய்ப்பேட்டை ஸ்ரீ மாரியம்மன் கோயில், திரௌபதியம்மன் கோயில்.

**திருவெண்காடு :** வேதாரண்யேசுவரர் கோயில்

**இராமநாதபுரம் :** சமஸ்தானத்துக் கோயில்கள்

**திருக்குடந்தை :** வரதராஜப் பெருமாள், வேதநாயகப்பெருமாள் கோயில்

**பல்லாவரம் :** திரிசூலநாதர் கோயில்

**நெரிஞ்சிப்பேட்டை :** ஆயிரவைசியர் மடம்.

**விருதுநகர் :** ஸ்ரீ சொக்கநாதர் கோயில்.

**கிருஷ்ணராஜபுரம் :** திருக்கண்மாலீசுவரர் கோயில்.

**சென்னை :** ஸ்ரீ சென்னமல்லீஸ்வரர், ஸ்ரீ சென்ன கேசவப் பெருமாள் கோயில்கள்.

**கம்பம் :** ஸ்ரீ காசி விசுவநாதர் கோயில்.

**திருப்போரூர் :** ஸ்ரீ கந்தசுவாமி கோயில்.

# 'ஒக்க நின்றான்'

"பாலகவி" வயினாகரம், வே. இராமநாதன் செட்டியார்
(தத் புருஷ தேசிகர்) தேவகோட்டை

---

காணப் பெறுகின்ற இவ்வுலகம் முதலாகிய அண்ட பிண்ட சராசரங் களனைத்தையும் படைத்து, நிறுத்தி, ஒடுக்குகின்ற பரம் பொருளான பரம சிவன், அத் தொழில்களைச் செய்யும் பொருட்டாக அவற்றோடு ஒன்றாகவும், உடனாகவும் இருக்கின்றானென்று வேதாக மம் முதலிய அருள் நூல்கள் கூறுகின்றன. உலகத்திற்கும் உயிர்களுக்கும் அப்பாற் பட்டு, அவற்றின் இயல்புகளோடு ஒரு சிறிதும் ஒவ்வாது வேறாகி, மேலோங்கி யிருப்பதே அவ் விறைவனது உண்மை யியல் பாயினும், அவ் வுலகுயிர்களின் தொழிற்பாடுகள் குறித்து அவன் அங்ஙனம் அவற்றோடு ஒன்றாகவும், உடனாகவும் இருக்க வேண்டிய இன்றி யமையாமை ஏற்படுகின்றது.

சிவ சத்தியின் திருவருட் பேற்றினால் அபர ஞான, பர ஞானங்களாகிய இரு வகை ஞானங்களையும் எளிதில் உணர்ந்த நமது பரமா சாரியாகிய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள், திரு வீழி மிழலைத் திருப்பதிகத்தில்,

"ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம்மவை யைந்தாய்
ஆறார்சுவை யேழோசையோ டெட்டுத்திசை தானாய்
வேறாயுட னானானிடம் வீழிம்மிழ லையே"

என்று அருளிச் செய்கின்றார்கள்.

இப்படியன், இந் நிறத்தன், இவ் வண்ணத்தனென்று எழுதவும், இயம்ப வும் முடியாது மனம், மொழி, மெய் களுக் கெட்டாமல், எல்லாவற்றையும் கடந்தவனாகி விளங்குகின்றவன் இறைவ னென்பதும், அவன் துணையினாலன்றி அணுத் துணை யாற்றலும் அமையா மையையுடைய ஆன்மாக்களுக்கு அவனை வந்திப் பதற்கும் வாழ்த்துதற்கும்—ஏன் —உலகியலில் வாழ்க்கை நடத்துதற்கும் கூட அவைகளோடு அவன் ஒன்றாகி, உடனாகி இருக்கும் கூட்டுறவு வேண்டப் பெறுகிற தென்பதும் இத் திருப் பாடலில் உணர்த்தப் பெற்றுள்ள உண்மைகளாகும்.

இறைவன், உலகுயிர்களுக்கு அப்பாற் பட்டு வேறாகித் தனித்திருக்கும் நிலையைச் "சொரூப நிலை" என்றும், உலகுயிர் களோடு கலந்து ஒன்றாகவும், உடனாகவும் இருக்கும் நிலையைத் "தடத்த நிலை" என்றும் ஆன்றோர் கூறுவர். இறைவனது சொரூப நிலை, எவராலும் உணர்ந்தோத

அரிய தாயிருப்பது. தடத்த நிலை, ஆன்மாக்களின் பக்குவத்திற்கேற்ப உணரப் பெறுவது.

" பூதங்கள் தோறுநின் றாயெனி னல்லாற்
போக்கிலன் வரவில னெனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுத லாடுத லல்லாற்
கேட்டறி யோமுனைக் கண்டறி வாரை '

என்பது திருவாசகம்.

மாயா காரியங்களாகிய தத்துவங்களுள், தூலமாயிருப்பவை பூத தத்துவங்கள். அதி சூக்குமப் பொருள்களாகிய உயிர்களோடும் சூக்குமப் பொருள்களாகிய மற்றைத் தத்துவங்களோடும் இறைவன் ஒன்றாகவும், உடனாகவும் இருக்கும் உண்மையைப் புலப் படுத்தவே, நமது ஞானாசாரியராகிய மணிவாசகப் பெருந்தகையார் இத்திரு வாசகத்தில், தூலப் பொருள்களாகிய பூதங்களில் இறைவன் நிற்கின்ற உண்மையைக் குறித்தருளினார். இங்ஙனம் உலகுயிர்களோடு இறைவன் கலந்து நின்றாலும், அவனது சொரூப உண்மை நிலை போக்கு வரவு இல்லாததும், கேட்டறியவும், கண்டறியவும் முடியாததுமே எனப் பிற்பகுதியால் இத்திரு வாசகம் அறிவிக்கின்றது.

சிவபெருமானது வேறாயிருக்கின்ற சொரூப நிலை, தன்மை பிறரால் அறிய முடியாத அவனது யாவர்க்கும் மேலான அளவிலாச் சீருடைமையைப் புலப் படுத்துவது. எல்லா வகையாலும் கீழ்மையுற்றிருக்கின்ற ஆன்மாக்கள், அவ்வெல்லா வகையாலும் மேன்மையுற்றிருக்கின்ற ஆண்டவனைப் படிப் படியாக அறிந்து பயன் பெறுவதற்கு உதவியாயிருப்பது, அவனது தடத்த நிலையே. இந்தக் குறிப்பைத் தேவார திருவாசகங்களாதிய அருள்நூல்களில் பரக்கக் காணலாம்.

வேறெவராலும் உணர்ந்துரைக்க முடியாத தனது நிலைகளை, இறைவனே, வேதாகம மாகிய முதல் நூல்களின் வழியாக நம் மீது வைத்த பெருங்கருணையினால் நமக்கு உணர்த்தி யிருக்கின்றான். வேதத்தில் இறைவனது தடத்த நிலையே மிகுதியாக வியக்கப் பெற்றிருப்பதால், அதனைக் கொண்டு பரம் பொருளுண்மையை உணருவதென்பது எளிமையான தாய் அமைய வில்லை. அதனாலேயே வேதத்தை உடன்படுகிற சமய வாதிகள் பலரும் வெவ்வேறு கடவுளரைப் பரம் பொருள்களென உரைத்துத் தம்முள் மாறு படுகின்றனர்'

சிவாகமங்களில் சிவபெருமானது தடத்த நிலையுடன் சொரூப நிலையும் செவ்விதாக உணர்த்தப் பெற்றிருப்பதனாலேயே, தத்துவாதீதனாக எல்லாவற்றையும் கடந்திருக்கும் அப் பெருமானே பரம் பொருளென்னும் உண்மையை, அது கொண்டு தெளிய முடிகின்றது. ஆண்டவனது தடத்த மாகிய பொது நிலையை உணர்த்துவதால் வேதம் பொது நூலெனவும், சொரூப மாகிய சிறப்பு நிலையை உணர்த்துவதால் சிவாகமம் சிறப்பு நூலெனவும் சொல்லப் பெறுகின்றது.

" வேதமோ டாகம மெய்யா மிறைவன்நூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன "

என்பது திருமந்திரம்.

சொரூப நிலையில் உலகுயிர்களுக்கு அப்பாற்பட்டு வேறாகியும், தடத்த நிலையில் அவ்வுலகுயிர்களோடு கலந்து ஒன்று

கியும் உடனுகியும் விளங்குகின்ற சிவ பரம்பொருளின் இயல்பைத் தமது திருமந்திர மாலையின் கடவுள் வாழ்த்து மூன்ருவது செய்யுளில் திருமூல தேவ நாயனுர் அறிவிக்கின்ருர். அது

"ஒக்கநின் ருனை யுலப்பிலி தேவர்கள்
நக்கனென் றேத்திடு நாதனை நாடொறும்
பக்கநின் ருரறி யாத பரமனைப்
புக்குநின் றுன்னியான் போற்றிசெய் வேனே"

என்பதாகும்.

இதில் "ஒக்க நின்ருன்" என்பது, சிவபெருமான் உயிர்களோடு பொருந்தி ஒன்ருயும் உடனுயும் இருக்கும் தன்மையை அறிவிக்கின்றது. ஆன்மாக்கள் இயங்கு திணையின் பாற்பட்ட சேதனர் களே யாயினும் சுதந்திரமில்லாதவர்க ளாதலால், அசேதனங்கள் போன்று ஆண்டவனுல் இயக்கப் பெறுபவர்களே யாவார்கள். இவ்வுண்மையை,

"ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே
அடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே
உருகுவித்தா லாரொருவ ருருகா தாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடா தாரே
பணிவித்தா லாரொருவர் பணியா தாரே
காட்டுவித்தா லாரொருவர் காணு தாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே"

என்ற திருத்தாண்டகத்தினுலும்,

"வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே"

என்பது முதலாகிய திருவிசைப்பாப் பகுதிகளாலும் உணரலாம், திருத்தாண்டகத்தில் "இறைவன் காட்ட உயிர்கள் காணுவார்கள்" என்பதனேடு, "அவன் காட்டாத பொழுது அவர்கள் காணுத வர்களே" என்பதும் உறுதி செய்யப் பெற்றிருக்கின்றது,

உலகத்துப் பொருள்களை நாம் பார்ப்ப தற்குரிய கருவியாக நமக்குக் கிடைத் திருப்பது கண். அக் கண் ணென்றே பொருள்களைக் கண்டறிவதற்குப் போதி யதாக நம்பால் அமைந்திருக்க வில்லை. கண்ணொளியோடு அக வொளி யாகிய உயிரறிவும், புற வொளி யாகிய கதிரவன் கிரணமும் ஒன்றி உடன் கூடி னலன்றிப் புறப் பொருள்களில் எதனை யும் பார்த்தறிய நம்மால் முடியாது. அது போலக் கடவுள் நம்முடன் ஒன்ருகிக் கண்டும், நம்முடனும் காணும் பொருள்களுடனும் உடனுகிக் காட்டியும் செய்து வரும் உபகாரத்தினுலேயே, நாம் காண வல்லவர்களாய் இருந்து வரு கிரேம். 'கடவுள் காட்ட உயிர்கள் காணுகிருர்க'ளென்னும் காட்டும் உப காரத்தைச் சித்தாந்த சைவர்களல்லாத வேறு சிலருங்கூட உடன்படுவர். ஆனல் "உயிர்கள் காணுதற்காகக் கடவுளும் உடனிருந்து காணுகிருர்" என்னும் காணுமுபகாரத்தை யறிந்தவர் வேறு எவருமிலர்.

உயிர்களின் அறிவு, செயல்கள் தொழிற்படுவதற்கு இறைவன் அவற் ருேடு ஒன்றுதலும் உடனுதலும் இன்றி யமையாதன வாதலின், அங்ஙனம் இறைவன் ஒன்றியு டனுதற்கண் காட்டு முபகாரியாகவும், பொருள் களின் பால் உயிர்களின் அறிவு இச்சை செயல்கள் தொழிற்படுவதற்கு இறைவன் உயிர்

களை அதிட்டித்து நின்று, அவ்வுயிர்களாற் பற்றப்பெறும் பொருள்களிலும் கலந்து நிற்க வேண்டுமாதலின், அங்ஙனம் இறைவன் பொருள்களிற் கலந்து நிற்றலின் கண் காணுமுபகாரி யாகவும் இருக்கின்றான்.

பொருள்களைக் காண்பதற்குக் கண்ணொளியோடு கதிரவனொளி கலந்திருந்தால் மட்டும் போதாது. காணப் பெறும் பொருள்களிலும் அக் கதிரவனொளி கலந்திருத்தல் வேண்டும். அங்ஙனமின்றிக் காணப் பெறும் பொருள் கதிரவனொளியிற் கலவாது இருளிலிருக்குமாயின் அதனை யறிய முடியாது. அதுபோல இறைவன் பொருள்களுடன் கலந்து நின்று உதவும் காணுமுபகாரத்தினாலேயே உயிர்கள் அப்பொருள்களை அறிகின்றன என்பது உணரத் தக்கதாகும்.

"காணுங் கண்ணுக்குக் காட்டு முளம் போல்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்"

என்பது சிவஞான போதம்.

"காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய
கண்ணுக்கேயுமுயிர் காட்டிக்
கண்டிடுமா போல ஈசனுயிர்க்
குக் காட்டிக் கண்டிடுவன்"

என்பது சிவஞான சித்தியார்.

காட்டு முபகாரம் காணுமுபகாரமாகிய இவ்விருவகைக் கடவுளுபகாரங்களையும் விளக்கப் புகுந்த மாபாடிய கர்த்தராகிய மாதவச் சிவஞான சுவாமிகள் "ஆன்மாவை இன்றியமையாத கண் ஒருருவத்தைக் காணுங்கால் ஆன்மா போதங் கண்ணொளியெனத் தானென வேற்றுமையின்றி உடனாய் விரவி நின்று கண்ணுக்குக் காட்டிய உருவத்தைக் கண் கண்டதென்றும் கண்ணை அதிட்டித்து நின்று ஆன்மாக் கண்டதென்றும் பிரித்தறியப் படுமாறின்றி இருவகைக் காட்சியும் ஒன்றனை யொன்று விடாமல் அத்துவிதமாய் ஒருங்கே நிகழும் முறைமைபோல, முதல்வனை யின்றியமையாத ஆன்மா ஒரு விடயத்தை அறியுங்கால் அம்முதல்வனது சிற்சக்தி ஆன்மசிற் சக்தியெனத் தானென வேறின்றி உடனாய் விரவி நிற்ப முதல்வனும் ஆன்மாவில் அவ்வாறு விரவி நின்று அறிவித்த விடயத்தை ஆன்மா அறிந்ததென்றும் ஆன்மாவை அதிட்டித்து நின்ற நானறிந்தானென்றும் பிரித்தறியப் படுமாறின்றி இருவகை யறிவும் ஒன்றனை யொன்று விடாமல் அத்துவிதமாய் ஒருங்கே விடயித்துச் செல்லுமாறு செய்துவரும் இவ்வுபகாரம்" என்று உரைத்தருளினார்கள்.

இங்ஙனம் காட்டு முபகாரியாகவும் காணு முபகாரியாவும் இருந்து உதவி புரிந்து ஒன்றாகவும் உடனாகவும் உயிர்களோடு கலந்திருக்கின்ற ஆண்டவன் அவற்றின் இன்ப துன்பங்களில் தொடர்பில்லாதவனாய் அவைகளுக்கு வரும் ஆக்கங்கேடுகளாற் பற்றப்படாதவனாய் வேறாகி இருப்பதையே "உலப்பிலி" என்று ஆசிரியர் திருமூலதேவர் அறிவிக்கின்றார். இங்கு "உலப்பிலி" என்பது இரண்டாம் வேற்றுமைத் தொகையாக இருந்து "உலப்பிலியை" என்று பொருள் கொள்ள வேண்டியதாய் அமைந்திருக்கின்றது.

இறைவனை வேதங்கள் "விசுவரூபி" என்று சொல்லும். "உலகமே உருவமாக" என்பார் அருணந்தி சிவம்.

உலகத்தை உருவமாகக் கொண்ட ஆண்டவனுக்குத் திக்குகள் ஆடையாக இருக்கின்றன. அதனால் அவனைத் "திகம்பரன்" என்று சொல்லுவார்கள். உடம்புடன் கூடிய ஆடையென ஒன்றில்லாது திக்குகளையே ஆடையாக உடைமையால் இறைவனை "நக்கன்" (ஆடையில்லாதவன்) என்ற பெயரால் அழைப்பதும் உண்டு. விசுவரூபி என்று இறைவனைப் போற்றுவதில், உலகுயிர்களில் அவன் கலந்திருக்கும் தடத்தநிலை நன்கு வெளிப்பட்டு விளங்கும். அதனாலேயே "நக்கன் என்று ஏத்திடும் நாதன்" என்று ஆசிரியர் திருமூல தேவநாயனார் இங்கே அருளிச் செய்வாராயினர்.

இதுவரை ஆண்டவனது தடத்தநிலையை உணர்த்திய ஆசிரியர் இனிச் சொரூப நிலையை "நாடொறும் பக்கம் நின்றார் அறியாத பரமனை" என்ற பகுதியால் அறிவுறுத்துகின்றார். இறைவனுக்கு அருகில் பதமுத்திகளாகிய சாலோகம், சாமீபம், சாரூபங்களைப் பெற்று வாழும் புண்ணியான்மாக்கள் அணுசதாசிவர் முதலாகப் பலர் இருக்கின்றனர். அவர்கள் அனைவரும் இறைவனுடைய திருவருளை நிரம்பப்பெற்று, அதனாற் கிடைத்த போகம் அதிகாரம் ஆகியவற்றை அடைந்த மேன்மையை உடையவர்களே. எனினும் இறைவனை முற்ற முடிய அறியும் வாய்ப்பு அவர்களுக்கும் கிட்டாதது என்பதை நாம் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். நீர்ப் பூக்களின் நறுமணத்தை அந்நீரை விட்டு ஒருபோதும் பிரியாத அந்நீர் வாழ் பிராணிகள் அறியமாட்டா. அதுபோலப் பதமுத்தி பெற்று என்றும் இறைவன் அருகிலிருக்கும் பேறு பெற்ற முத்தான்மாக்களும் கூட அவனியல்பை அறிய முடியாது. இடையீடின்றி அருகிலிருப்பவர்களும் அறியமாட்டாத அதி நுட்பப் பொருளாய் ஆண்டவன் இருக்கிறானென்பதும், அதனாலேயே அவன் யாவர்க்கும் மேலான பரமன் ஆயினானென்பதும் இதுகொண்டு உய்த்துணரத் தக்கனவாக இருக்கின்றன.

இங்ஙனம் சொரூப தடத்தங்களாகிய இருவகை இயல்புகளையும் உடைய பரமசிவன் என்பாற் புகுந்திருக்க, அதனால் அவனை இடையீடின்றி நினைவு கூர்ந்து நான் போற்றுதலைச் செய்வேனெனவும், அப் பரமசிவனை அவன் விதித்த வேதாகம நெறிவழிச் சாதனங்களைக் கைக்கொண்டு ஒழுகிச் சிந்தித்துப் போற்றுவேனெனவும் அருளித் திருமந்திரத்தின் இச்செய்யுளை ஆசிரியர் முடித்திருக்கின்றார்.

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்கு நிற்பது இறைவன் இயல்பாதலாலும், அவனருளாலல்லது அவனை வணங்க முடியாதாதலாலும் "புக்கு நின்று" என்னும் செய்தெனெச்சத்தைப் "புக்கு நிற்க" என்னும் செயவெனெச்சமாக்கிக் கொண்டு பொருள் செய்தல் ஈண்டுப் பெரிதும் பொருத்தமாயிருக்கும்.

நலம் பெருகுக!











காஞ்சிபுரம் வித்வத்
ஸதஸ்ஸில் கலந்து
கொண்டு சிறப்பித்த
பெருமக்களின் திரள்





நீடாமங்கலம் ஸ்ரீ சந்தான ராமசுவாமி கோயில்
கல்யாண மண்டபத் திறப்பு விழா.



தஞ்சை அறநிலையத் துணை ஆணையர் திரு.
A. மார்க்கண்டவேல்ராஜன் அவர்களுக்கு
வரவேற்பும், திரு கே. சோமசுந்தர தேசிகர்
அவர்களுக்குப் பிரிவு அனுப்பும்
நிகழ்த்திய சிறப்புக் கூட்டம்.

(13—10—64)



தஞ்சை ஹரி கதா காலட்சேபப் பயிற்சிப் பள்ளி
ஆண்டு விழாவில், அறநிலைய ஆணையரும்,
பயிற்சிப் பள்ளியின் சிறப்பியல் முதல்வர்
திரு. அண்ணாசாமி பாகவதரும்.

(20—9—64)

Edited and Published by the Commissioner, Hindu Religious and Charitable Endowments (Admn.) Dept., Madras-34 Printed at Manorama Press, 39, M. J. B. St., Madras-5.